உ

முருகக்கடவுடுணை

# மயிலாசலக்கலம்பகம்

## திருப்புகழ்

### பதிகங்கள்.

---

இவை

மஹான வண்ணச் சரபம்

முருகதாசசுவாமிகள் திருப்புகழ்ச்சுவாமிகள்

எனவழங்கும்

**ஸ்ரீலஸ்ரீ தண்டபாணிசுவாமிகள்**

அருளிச்செய்தன.

---

பொம்மைய பாளையம் பெரியமடம்

வீரசைவசிங்காசனாதிபதியாகிய

**ஸ்ரீமத் - சிவக்கியானபாலையசுவாமிகள்**

பொருளுதவிகொண்டு

திருவாமாத்தூர்

**கௌமார சபையாரால்**

பதிப்பிக்கப்பட்டன.

---

இரண்டாம் பதிப்பு.

இரத்தாக்ஷிஹு மகாரவி

1924



உ

முருகக்கடவுட்டுணை

# சாற்றுகவிகள்

சோழவந்தானூரிலெழுந்தருளியிருந்த

## ஸ்ரீமத் - கந்தசாமி சுவாமிகள்

அருளிச்செய்தன.

### அறுசீர்விருத்தம்

மேலைவிண்ணுளரவர்வேள்விப் புலையுமிகழ்திருப்புகழோன் விளம்பிசருட்டப், பாலையனுக்கருள்புரிந்த மயிலமலைக்குகன்கொள்கலம்பக நாற்பான்மை, யோலையெழுத்துயர்வுணராப் புதுப்புலவர்குழுவறியா துண்மைவெண்மை, வாலையருண்முறப்பவத்தும் பெற்றபுலவோருணர்ந்து மகிழ்தற்பாற்றே.

### வெண்பா

கள்ளக் கருத்தினர்க்குக் கைப்பாய்க் களங்கமின்றித்
தெள்ளத் தெளிந்தவர்க்கே தித்திக்கு—முள்ளப்
பலிக்குந் திருப்புகழைப் பாடுஞ் சரபங்
கலிக்குமயி லக்கலம்ப கம்.

இந்நூலாசிரியரது மாணாக்கர்களிலொருவராகிய

# தி-செ. சித்திரபுத்திரபிள்ளையவர்கள்

இயற்றியன

## அறுசீர்விருத்தங்கள்.

திருவருண் முருகதாசன் றிருப்புகழ்க் காரனெங்கள்
குருபரன் றண்டபாணிக் கோலமுஞ் சமைந்தமேலோ
னருள்வலிப் பெரியோரபோற்று மயிலொடு மயிலமேவிக்
கருணைசெய் கந்தன்மீது கலம்பக முரைசெய்தப்பால். (க)

அதிநய வண்ணப்பாவே யாந்திருப் புகழுமற்றும்
பதிகமோ ரிரண்டும்பாடிப் பாலைய முனிக்குமன்னன்
றதிபகர்ந் தருட்பேராண்மை தோய்சிவப் பிரகாசற்கும்
விதிமுறைப் பதிகம்பாடி மேதினி யுயச்செய்தானே. (உ)

## எண்சீர் வண்ணவிருத்தம்.

தனந்தனந்தன தானன தனன.

கலம்பகம்பல பாடிடுபுலவீர்
கவின்பெறும்பொழி லார்திருமயிலா
சலம்புரந்தவிர் சேயசண்முகவேள்
சரண்புனைந்துயு மாறுகொள்விழைவா
னலம்பொலிந்தநெல் வேலியில்வருவா
னவின்றதொன்றுள தேயதனிடைநீர்
பொலம்பிறங்கயி னீபமொடணிதோள்
புனைந்தவண்கவி நாடுதல்கடனே (௩)

இந்நூலாசிரியரது பத்தர்களிலொருவராகிய

## உரத்தூர் சின்னுரெட்டியாரவர்கள்

### இயற்றியன

### வெண்பா.

மாமதுரச் செந்தமிழ்ப்பா வாணர்தமக் கன்னையாய்ப்
பாமருஞ் சீர்பெறச்செய் பாலைய - னுமகனோர்
தண்டபா ணிச்சரபந் தன்னைமயி லாசலத்திற்
கண்டளவி லுள்ளங் களித்து. (௧)

### கட்டளைக்கலித்துறை

குருநீதிக்கேற்ற முகமனுங்கூறிக் குழைந்தணைத்துத்
திருநீறுநெற்றியிற் றீட்டிநங்கந்தன் றிருவடியிற்
கருமாலைநீக்குங் கவிமாலைசூட்டெனக் காணரிய
பெருமானுரைத்தன னென்றேசந்தோடம் பிறந்தபின்னே. (௨)

### இரட்டையாசிரிய விருந்தம்

அந்தமயிலாசலக் குகன்மகிழ்கலம்பகமு மணிதிருப்புகழிராறு, மநு
தினஞ்சிறுவர்களு மாவலொடுமேத்துதற்காகுமிருபதிகங்களுந், தொந்த
முறுமெய்ப்புகழ்ச் சிவஞானபாலைய சுவாமிபுனை பதிகமொன்றுந்,
தூயபுலமைச்சிவப் பிரகாசமுனியிசைதொனிக்கின்றபதிகமொன்றுங்,
கந்தவேளருளையுந் தனதன்பருக்குதவு கருணைபொலிகின்றபண்புங், கவி
கோடியாயினும் பொழிவதற்கஞ்சாத காளமுகினிகர்மாட்சியுஞ், சந்தமலி
யொலியலந் தாதியுடனெழுவகைத் தமிழிலக்கணமொழிந்த, தாட்டீக
மும்பின்னுமுள்ளபலதகவுந் தழைத்திடமொழிந்தனனரோ. (௩)

---

உ

குருவே துணை

# பதிப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியசுவாமிகளது மாணாக்கரும் குமாரருமான

## ஸ்ரீ - மு - செந்திணாயகம்பிள்ளை

இயற்றியது.

எண்சீர்விருத்தங்கள்.

திருமலியு மயிலமலைத் தலைமிசைவாழ் முருகோன்
றிகழ்புயத்திற் கலம்பகப்பா மாலைமுன்பாலையன்
பொருவிலுரைப் படிமுருக தாசகுரு நாதன்
புகன்றணிந்தா னதனையிந்தப் புவியினர்தேர்ந் துய்வான்
கருணைகொளப் பாலையன் சுதனாம்பா லையன்
கவின்மிகுமச் சினிற்பதித்துக் கனவுதவி புரிந்தா
னிருநிலமுற் றவர்பெறவப் புத்தகந்தீர்ந் ததனா
லிரண்டாகும் பதிப்பினைநன் கினியதனை யாலே.

அந்தப்பா லையன்சுதனாம் பொன்னுசா மிப்பே
ரமைந்துதவ நிலைகொளும்பா லையனெனும் பெரியன்
சொந்தப்பான் மையிற்பொருளீந் தச்சியற்றிச் சோலை
துன்னுசிர வணபுரரா மானந்த முனிவன்
வந்தற்பாற் றன்னிடஞ்சந் திததபெருங் களிப்பை
வளர்க்கவெளிப் படுத்தினன்பொன் மயிலுகைக்குங் கந்தன்
சந்தப்பாப் பதிகமுதற் சிலதுதிக ளதனிற்
சார்ந்தமைந்த வப்பெருமை சாற்றரிதா மன்றே.

குருபாதமேகதி.

முருகக்கடவுடுணை.

# மயிலாசலக்கலம்பகம்.

## பாயிரம்.

கொச்சகம்.

அன்றுசிவப் பிரகாச னரியதுதி தனக்கெய்தச்
சென்றுபகர்ந் தனைநாடிச் சிவஞான பாலையன்
குன்றுறையும் மயிலமலைக் குமரனுக்குக் கலம்பகமொன்
றின்றுசொலத் திருப்புகழோ னிடத்திலினி திசைத்தானே

வெண்பா

ஆட்டிப்பால் வாய்மை யடக்கி யடுத்துவந்து
சீட்டுக்கு ளாடலொன்று செய்துபல—பாட்டுடைய
பாலையனை யேவியென்னைப் பற்றிவலி தாண்டுகொண்டான்
சோலை மிகுமயிலத் தோன்.

எண்சீர்வண்ணவிருத்தம்.

தனதனதத்தன தத்தத்தனந்தனனு
சயிலமுழுக்கவும் வெட்கச்சிறந்தாரனர்
தமதுருவொத்தரு விப்பொற்பிசைந்துளதா

மயிலமலைக்குக னுக்குக்கலம்பகநூல்
வனைகுவதற்குயர் சொற்கட்டுவந்தருள்வீர்
வெயிலவனுற்றவ யிற்றுச்செழுங்களிறே
வெளிறுமலர்க்குளி ருக்கைக்கிசைந்தவனே
யயின்மயில்குக்குட முற்செப்பநின்றனனே
யடியர்பதக்கம லத்துற்ற நுண்பொடியே.

---

## நூல்.

### மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

திருமகள்சேர் நெடுமாயன் செங்கமலக் கண்கடரு
மிருமடவார்க் கிடைநீடு மெழிற்பவள மலைபோல்வாய்
பரிதிமதி யிசைந்தாங்கு பகர்முடியு முகமொன்றும்
விரிகருணை விழிமூன்றும் விளங்குகுழைச் செவியிரண்டும்
வண்பனுவற் பைங்கிள்ளை மனைநுகரு மணிநாசிச்
சண்பகமுஞ் சிறுமுறுவற் றரளநகைக் கனிவாயும்
பொற்பணியும் பன்மலரும் பொலிந்தகழுத் தொடுமார்பும்
விற்படுமின் னெனக்காணும் வென்றிவேல் வியன்சீரு
மடல்வயிரந் திரிசூல மபயம்வர தந்திலங்குங்
கடகநெடுங் கரந்தாங்குங் கவின்றோள்க ளொருநான்கும்
குஞ்சிமணிச் செஞ்சதங்கைக் கொத்தரையுங் கோசிகமும்
விஞ்சியபே ரானந்தம் விளைத்தருளுந் துணைத்தாளுந்

கொண்டுமயி லாசலத்தின் குவட்டிலுறுங் கோயிலிடை
மண்டுசடைச் சிவஞானி வலத்தமர வாழ்கின்றாய்
மயிலேறித் தகரேறி மழவெள்ளைக் களிறேறிக்
குயில்போலு மொழியாள்கண் குளிரவருங் குருந்தேநீ

இவையெட்டுந் தாழிசைகள்.

அரன்வழிபடமுன மருணலமருளினை
முரகரியமரர்முன் மொழிபுகழ்மாலினை
யயனழுதலமர வறமொடுகறுவினை
புயலிவர்மகபதி புனைமுடியுதவினை

இவைநான்கும் அராகங்கள்.

அன்பொடுமுன் றுதிகூறி யாறெழுத்தா லருச்சித்துத்
தென்பொதியைமிசைவாழ்வான்சிறப்பனைத்தும்பெறச்செய்தாய்
நின்றுமைத் தொன்றினையே நிதங்கூறச் சலியாத
மின்னுனைன் றிழந்தகரம் விரைந்துதவி மீண்டுவந்தாய்

நற்கீரன் சிறைநீக்கி நவிலரிய தமிழுணிவான்
கற்கீறி யலகையையுங் கடியவடி வேல்விடுத்தாய்
முற்றுசுவைக் கவிப்பொய்யா மொழிப்புலவன் களிகூரப்
பற்றுமொரு கோலொடுமுன் பாலையின்முட் டையுமானாய்

தென்னருணைக் கோபுரத்திற் றிகழொருவன் றனக்காக
முன்னமொரு தூணிடத்தின் முளைபதற்கு மிசைவுற்றாய்
போரிநகர் முனிவன்முதற் புகலுமவர் புகல்கின்ற
சீரியவ ரளவில்லார் சிந்தித்த பேறளித்தாய்

இவையாறுந்தாவுகள்.

ஏனமருப்பற மோதிவதைத்தனை
யேழிசையிற்கவி கோடுதொடுத்தனை
மானவிர்கட்குரி யாரைமயக்கினை
மாசறுசிட்டிவி ளோதமியக்கினை

இவைநான்குநாற்சீரோரடியம்போதரங்கங்கள்.

மாவடி யோடற வென்றனை
மால்வரை யாவினு நின்றனை
தாமத ரோர்வரி தாயினை
சாரணர் வாழ்வற மேயினை

இவைநான்குமுச்சீரோரடியம்போதரங்கங்கள்.

சேவல்பொ றுத்தனை
பாவம றுத்தனை
சிந்தையு ளூற்றனை
விந்தைகள் பெற்றனை

இவைநான்குமிருசீரோரடியம்போதரங்கங்கள்.

ஆதலில் - இது தனிச்சொல்.

கடலிற்பொருநையிற் கனலிற்றமியேன்
றிடமுடன்விடுத்த செழுந்தமிழ்ப்பனுவ
லனைத்துமீண்டொளிர்தர வளித்துமுன்னின்று
நினைத்துணைத்துயருஞ் சோரதோரிஇத்
திருமலைக்குவட்டிற் செய்தபோரா

இருமலைக்கோயிலி லுரைத்தமாற்ற
மாதியபிறவு மலைத்தோரும்
பேதியாவண்ணம் லேசப்புரிந்து
கைச்சிலைக்குறவர் கவின்றருசாரற்
பச்சிளஞ்சோலைப் பரண்மீதிருந்தாண்
மதலையென்றியாவரும் வழுத்தவைத்துப்
பதநிழற்றருவாய் பரமெனவந்தேன்
விதிமுறைதவறி வெள்ளிலையென்று
கதிர்மணிவடமுலை கருத்துட்டோன்றப்
பழையபாவொன் று பகர்வான்றனையும்
விழைதருகருணை மிகையாற்புரந்தாய்
நின்றிருவுள்ளமெந் நேரத்
தென்றிகைப்பொழிக்கு மெனவிரங்கினனே. (க)

## ஒரு தாசிரியச்சுரிதகம்.

## வெண்பா.

இரங்குந் திருவுள்ளத் தேற்றமுற்ற செவ்வேள்
வரங்களெல்லா நல்குமலைகேள்—குரங்கனைய
பாழ்மனமே பல்கோடி பத்தர் பரிசுபெற்று
வாழ்மயிலத் துள்ள மலை. (உ)

## கட்டளைக்கலித்துறை.

மலைத்தெய்வமேபரமென்றெப்பிடாச்சிலமானிடருஞ்
சிலைத்தெய்வம்வைத்துப் பலவாறுநாமங்கள் செப்பலென்றோ

நிலைத்தெய்வம்வாழு மயிலாசலத்தி னிறைபுகழ்நேர்
கலைத்தெய்வமானபிடியேவெண்டாமரைக் கன்னிகையே. (௩)

கலிப்பா.

கன்னிக் குந்த்தி கணவன் மயிலவெற்பை
யுன்னிக் கருத்தோ டுடலுருகப் போற்றிசைக்கு
மென்னிட்ட மின்னதெனை யாரறிவா ரென்றனக்கு
மின்னிற் றிகழ்ந்தகதிர் வேலுமயி லுந்துணையே. (௪)

கலிநிலைத்துறை.

மயிலாசலத்துற்ற குமரேசனுக்கான வழிபாடதாற்
கயிலாயமொடுமேரு வரைமீதுவைகுங் கனற்கண்ணுதல்
பயிலாகமத்தைப்ப ழிக்கின்றதீயோர்கள் பகைமிஞ்சுநா
ளெயிலாருமடவார்த மக்கிச்சைகொடுவாட லொவ்வாததே

கட்டளைக்கலிப்பா.

வாதநூற்பிணக் காளர்கண்காணரு
மலயமால்வரை மாமுனிதன்னருட்
போதவாரியின் மூழ்கிட நாடுவேன்
புந்திநொந்துபு லம்பிடலாகுமோ
வேதநான்முகக் கள்வனைக்குட்டிய
வீறுகொண்டொளிர் மெஞ்ஞான தேசிகா
மாதமோர்திரு நாள்வருஞ்சீர்திகழ்
மயிலமால்வரை வாழ்முருகையனே. (௬)

கலிவிருத்தம்.

ஐபமின்றிமுன் னறைந்தவாசகப்படி யருளி
மெய்யர்தம்புடை யுடுறவிடுக்குநா ளுளதோ
வையம்வாழொடு துதிசெயுமயிலமா மலையின்
செய்யபொற்குவ டாமெனத்திகழ்தருஞ் சேயே. (எ)

அறுசீர்விருத்தம்.

சேயநாண் மலர்கொண்டுன்னைத் தினந்தின மருச் சித்தேத்துந்
தூயவர் கமலப்பூந்தாட் டுகளினி தலும்வீண்போமோ
மாயவன் மருகா விண்ணோர் மகள்புணர் கனவாவள்ளி
நாயகா மயிலவெற்பி னடஞ்செயு முருகவேளே. (அ)

எழுசீர்விருத்தம்.

முருகறுமலர்க் கடம்பணிபுயத்தனை மூவிருமுகத்தானை
யருகர்பாழ்மதத் திமிரமிவ்வுலகைவிட் டகலவந்தருள்வானைப்
பெருகுசீர்த்திரு மயிலமா மலைமிசை பேணியபெரியோர்தங்
கருணைஞானமுஞ் சித்தியுமுணர்பவர் காலனுக்கஞ்சாரே. (கூ)

எண்சீர்விருத்தம்.

அஞ்சலளித் தாண்டபெருங் கருணைச்சீரு
மருணகிரி தானெனநீ யறைந்தசொல்லும்
வஞ்சகமென் றிகழ்வதற்கு மஞ்சுகின்றேன்
வருத்தமினிச் சகிப்பதற்கும் வல்லேனல்லேன்

னெஞ்சகத்தன் றுடியதை மறக்கமாட்டே
னெடுமயிலக் குவட்டினின்முன் னின்றேன் கண்பார்
பஞ்சவன்னச் சிகியூரும் பவளமேனிப்
பண்ணவனே யெண்ணரிய பான்மையானே. (க0)

இரட்டையாசிரியவிருத்தம்

ஆனமட்டிற்பணிபு ரிந்தனதுமெய்யன்ப ரனைவயினிற்பு கவிரும்பா, தணிநகைமடந்தையர்மு லைத்துணைநினைத்துருகி யலமருந்தமியனேனே, யினருக்கமனனைய வீரர்முதலோர் களுமி றைஞ்சும்பதத்தில்வைத்தன், னெழில்வதனநிரை குலவு மறுவகைநெறித்தலைவ னென்றெளிரவுஞ்செய் வையோ, கானவக்குடியிலொரு கருகூலமெனவந்த கன்னிக் கிசைந்தகணவா, கனகநகராதிபன்வ ளர்த்தபிடிகண்டுளங் களி கூரவருகந்தனே, வானளக்குங்குவடு தொறுமிழியுமருவிபல மாளிகையெனக்குலாவு, மயிலாசலத்தில்வரு புலவோர்துதிக்கு மொரு வடிவேல்பிடித்தகுருவே. (கக)

புயவகுப்பு.

தனன தான தத்த தன - தானத்தனந்தன.

குருபராவெனத்தினமு முருகிநாடுமெய்ப்புலவர்
கொணர்வதானமுத்தமிழை நேசித்துயர்ந்தன
குரவநீபமுற்பகரு மளவிலாமலர்த்தொகுதி
குலவுமாலிகைத்திரள்கள் சூடிப்பொலிந்தன

குறைவுறுவொளிப்பரிதி யனையதோளணிப்பகுதி
 கொடுபல்பூணொடுதகதொருமு  நாலுற்றிலங்கின
குலிசமுமிலைப்படைவில் சுணைவைவேன்முதற்பலர்சொல்
 குருதிபூனுடைக்கருவி  சேரச்சுபந்தன
குருகுகூவெனத்தனது சிறகைமோதடற்பறவை
 குளறிடாமொழிக்கிளியொ  டேறிப்பிறங்கின
குளிரும்வாவியிற்கவுரி முலையினோடுகிர்த்திகையர்
 குயமுமார்வமுற்றமுத  மீயப்பிசைந்தன
கொடியராவினைப்பகலை யுலகின்மாறிவைத்தமரர்
 குழுவெலாமெதிர்த்தமர்செய்  தோடக்கவின்றன
குறளைநாரதத்தவசி முயலும்வேள்வியிற்றகரோர்
 குதிரையாகிடக்கசையி  லுல்விட்டுவந்தன
குடையதாமெனக்கலப நிழல்கொண்மாமயிற்கடவல்
 குணமெனுநினைப்பவர்க  ளேடுற்றவிர்ந்தன
குமிழிதோய்மதத்தயில மொழுகும்வாரணக்களிறு
 குதறிநுலெழிற்றலையின்  மோதிச்சிவந்தன
குவளைநேர்விழிச்சசிமின் மருவுவான்வளர்த்துதவு
 குமரிபூண்முலைக்களப  மாரக்கமழ்ந்தன
கொடியினூடுவைத்திறுக முடியும்வார்தழைக்கலைகொள்
 குறமினுளணிப்பரண்மு  னேகிக்குவிந்தன
கொலைசெய்வாள்விழிச்சிறிய மசளிர்பார்வைமெய்த்தவர்கள்
 குலைவுறுமனக்கவன  மீறப்பொருந்தின

கொடுமையேமிகப்புரியு மவர்கள்வேரறக்கறுவு
குறியுளார்தமக்கிழிவு றுமற்புரந்தன
கொடையிலாமுழுக்கயவர் மனைகடோறுமுற்றடியர்
குறுகிடாதருட்கடலின் முழ்கச்செய்பண்பின
குசையுநாணுறக்கதுமை யுடையமிபாமெனப்பெரிது
குதிகொள்வேனுளதஇனும நாள்சற்றெளிர்ந்தன (வ)
வருவவாதமிடடுழலு மவர்கள்போகமற்றவர்க
ளணுகுமாறிரட்டியந னீதிக்குமொன்றின
வணிகொள்வார்செவிக்குழைக ளூலவுசீர்பொறுத்தழிவி
லசலமேயெனக்கவிஞர் பேசக்கிடந்தன
வடலையாருடற்பரமர் பிரணவாகரப்பொருளை
யறியுநாள்புனற்சடில மேறிக்குளிர்ந்தன
வகிலலோகமுற்பருகி யுமிழுமால்வயப்படையை
யடையுமாறியற்றியநல் வீறுற்றெழுந்தன
வரியநான்மறைக்கிழவ னுடலில்வேர்வைவிட்டலறி
யவசமாகிடச்சிறிது கோபிக்கைகொண்டன
வமரர்கோன்மிகப்பயமொ டிணையில்காவிரிக்கரையி
லமையெனுவுருப்பெறுத நீரப்புரிந்தன
வடல்கொள்வீரருட்டலைவ னொருவனீசுரக்கனைகொ
டவுணர்கோனினைப்பழிதல் காணச்சிறந்தன
வலரும்வாரிசக்கடவுள் வரமதாலுவப்படையு
மவர்கண்மேலெதிர்த்தவனை யாளப்புகுந்தன

வளவின்மாயைவெற்புருவ முடையதானவப்பயலை
யணுவைநேர்பொடிப்படமு ஞூளட்டுகின்றன
வழலும்வாய்விடக்கடிது பொருததாருகக்கொடிய
னழியவேல்விடுத்துலக மோதத்திகழ்ந்தன
வறிவினான்மிகப்பெருமை யுடையகோளரித்தருவ
னறையும்வாசகப்படிய னோனைத்தடிந்தன
வலையகோதநிக்கிடையி னெடியமாமரத்துருவொ
டவிருவாணையப்பொழுதி லேவெட்டுமொய்ம்பின
வமலயோகநத்துவசின் மயசிவோகமுற்றவர்த
மரசனாமகத்தியனை நேர்முத்தரன்பின
வயர்வுறுமெலக்கணமு முருகனேயெனப்பகரு
மவள்கைவேறுபட்டதனை யிதற்கிரங்கின
வலகையான்மிகத்தளரு மொருவனோடுபரபலரு
மவிவுறுதுகற்கதவு கிறப்பிளந்தன
வதிகவாழ்வுடைப்பழைய மதுரையூரினிற்புலவ
ரலமராதுகைக்குறியி னால்வைத்தநண்பின (௭)
கருதுமாறுமுற்குலவி யுதவிடாதபொற்குவடு
கதறமோதிடத்தகுதி யாவுற்றசெண்டின
கடலையேவிடத்துணியும் வருணனார்தொழத்தனது
கதிர்குலாவுசத்தியினை வீசிக்கனன்றன
கனகநாடுடைத்தலைவன் வலியதாரைக்கொடுசெய்
கபடமானதிற்சிறிது கோவற்றிருந்தன

கவிசொலேனைத்தினமு நுவல்பொய்யாமொழிச்செந்திபோர்
கரியகோல்பிடித்திசையு மாடற்பயின்றன
கனலதாமலைக்கருகி னிலவுகோபுரத்துயுமோர்
கவிஞனுதியிற்பகர்பல் பாடற்றுதைந்தன
களிறுநாணுறத்தொனிசெய் பனுவலாறொருத்தனது
கலியின்வேரறத்திருடி யயத்துணிந்தன
கலைவலார்மிகப்புகழு மிசைகொள்போரியிற்றவசி
கவலைதீர்வதற்கொருக பாசத்தியைந்தன
கறையில்பாலையற்குவனக பெருகவோர்கவிக்குரிய
கனவினார்மலர்க்கொடுசெல் வாரதத்தமிழ்ந்தல
கழுழனார்கையிற்றலையை நிருமலாநதிக்குரிய
கரையில்வீசுமுற்கடிதி லேகிக்கவர்ந்தன
கழறுவேழ்வகைப்புவியி லுயிரெலாமழத்தனது
களியினன்மிகக்குதிகொ ளேனத்தைவென்றன
கயிலையீசனைபொருவு முனிவன்வாய்மொழிப்படியோர்
கடவுண்மாமணிச்சுடிகை வீழத்துரந்தன
கனியெண்மோதகக்குவிய லனையவேமிகப்பருகு
கரியினீள்வயிற்றிரவி மேவக்கடிந்தன
ககனமாந்திப்புனலை யனையநிரைமுத்துறைகொள்
கனவிடாயறச்செயும்வி னோதத்தொழும்பின
கமலவாவிவிட்டெழுமோர் முதியதாதையுட்கருதா
களவுதீர்தரக்கரம தான்மெய்ப்புகன்றன

கவளயானையொத்தொளிரும் வழுதிகூன்விடச்சுரமொர்
கணைநிலாதறத்திருவெ ணீறிட்டுகந்தன
கடுவைநேருடற்சமணை முனிவராமுழுக்கொடியர்
கழுவிலேறிடத்தமிழை வாரிச்சொரிந்தன (௫)

பருவருமலர்க்கணைக ளைவில்கோடிதைத்துருகி
மகளிர்சேனையிற்குரிமை மீறிப்புணர்ந்தன
மதுரசாகரத்தமிழை யுதவுசீருடைப்பொதியை
வரையின்வாணர்மெய்த்தவசு போலப்படர்ந்தன
வகுளநாண்மலர்த்தொடையல் புனையும்வேண்முதற்சிலருண்
மகிழ்வெலாமறப்பெருகு கோலத்தமைந்தன
வரதமானதைப்பொருவி லபயமானதைக்கொடுதன்
வலிமைநாடுமுதநடமி சாரதைதவிண்டன
மறவனோடுகைச்சமர்செய் திரவிலோர்கொடிக்குவகை
மலியுமாறெழிற்கயல்கண் மீறக்கொணர்ந்தன
மறதியாலுணக்களியின் முடுகுவான்வெளிப்படவு
மனையின்மேயதிற்சிறிதி லாறப்பகிர்ந்தன
வயதினாலுமிக்குயரு மவண்முனைவலிற்கடியின்
மனைவிலோர்பழக்கினைய நாள்விட்டெறிந்தன
மறுவிலாவரைக்கவிதை யொருவனேதலிற்புளிய
மரமதூடுகொப்பொடிவ தாகதெரிந்தன
மனையலாதுமற்றவரை யனையெனுநினைப்பவன்முன்
மணியினுவறப்பகர்த லாதிக்கமர்ந்தன

வனசலோசனத்தொருபெண் முடியின்மேல்விழுத்தகுகல்
வழுகுமோர்படிக்கடியி லேமிற்கைகண்டன
வயிணவாதரத்தொருவ னிசையுங்ளின்முற்புனையும்
வளைபமாமடற்றளைக ளோவத்தொடர்ந்தன
வயிரவாதிகட்களவி னிணமுமுனுமிக்குதவும்
வலியபோரினுக்குரிய வீரத்தழுந்தின
மனதுவேறுபட்டிடுத விலதுநாடிநிற்பவர்கண்
மறலிதூதருக்கயர்வு றுமற்றிரிந்தன
மலையிலேறிமுற்புவியி லுருளுமாணவச்சிறுவன்
மடிவுறுதெடுத்துலகி லேவிட்டவம்பின
வரியராவினத்தரசர் பலர்சொனுலுமுற் றுதலின்
மகிமையாண்மையொப்பனவெ லாமுற்றடர்ந்தன
வளமைசேர்திருப்புகழை மொழிகுவார்களுக்கெளிய
மயிலமாமலைக்குமரன் வாகைப்புயங்களே (கஉ)

வெண்பா.

புயலார் மயிலமலைப் புண்ணியமே போல்வான்
கயலார்கண் வள்ளி கணவ—னியலாரப்
பாடுமடி யேன்றனக்குப் பத்தர்மனப் பங்கயந்தோ
ருடுமடி யேன்றரமாட் டான். (கந)

கட்டளைக்கலித்துறை.

மாட்டாதவென்னை வலியவந்தாட்கொண்டு வண்கமலத்
தாட்டாமரைத்தொண்டு செய்யென்னமுன்புதடுத்து நின்றான்

கேட்டார்மகிழ வரங்களெல்லாந்தரும் கீர்த்திகொண்டு
பாட்டாலுயர்மயி லாசலத்தோங்கயிற் பண்ணவனே, (கச)

அறுசீர்விருத்தம்.

பண்குலவுசெந்தமிழா னின்கமலத்திருவடியே பரவு மென்முன், கண்குலவுகோதைமயிற் பரிமீதிலொருதரநற் காட்சியீந்தாள், பெண்குலவுமொருபாகப் பிஞ்ஞகனுக்குபதேசம் பேசும்வாயாய், திண்குலவுமயிலமலைக் குருபரனே வேலணியுந் திரடோட்சேயே. (கரு)

எழுசீர்விருத்தம்

சேயமாமுகங்க ளாறுடைக்குமர தேசிகன்றிருக்கை வேற்பெருமான், றாயவெண்சேவற் கொடியணிந்தாடுஞ் சுப்பிரமணியனையன்றி, மாயவன்பரமன் கணபதிமுதலாம் வானவரிலையெனவுணர்வார், தாயகமான மயிலமாமலைச்சீர் சாற்றிடத்தக்கவரெவரே (கசு)

எண்சீர் வண்ணவிருத்தம்.

தனன தந்ததன தனதன தத்தன.

எவர்களும்புகழு மயிலமலைக்குக னெனமொழிந்தவன திருசரணத்திடை, தவமுபன்றுறைபு மனமுளவித்தகர் சிமையடைந்தவர்கள் பெறுவனசெப்பிடி, லவனியெங்குநிறை தருபுகழ்சத்திய மதிவிதங்குலவு மதுரநயத்தமிழ், சிவன்முகுந்தனயன் மகபதியொப்பவர் திறமையின்பமலி சமரசமுத்தியே. (கஎ)

இரங்கற்றுழிசை.

முத்தயனையரைகமடவீர் மொழியக்கேளீரென்கனவின், முன்னமொருநாண்மயிலமலை முருகக்கடவுள்வலியவந்து, சித்தங்கவர்ந்தான்வளைகவர்ந்தான் சேலைகவர்ந்தான்றிறல்கவர்ந்தான், சிறிதுநாணமில்லாமற் றேடித்திரிந்துதிகைக்கவிட்டான், பைத்தவரவக்கடிதடமும் பணைத்தமுலையுமதவேளும், பாவைத்தொனியும்பிறவுமெனைப் படுத்துந்துயரஞ்சகிக்கறியே, மெய்த்தகுரவங்குவளைவெட்சி நீபமுதலாமாலைகளி, னொருமொன்றையெனக்காக நீர்போயிரந்துகொணர்வீரே. (கஅ)

வெண்பா

வீர வடிவேற்கை வித்தகனை வெள்ளிமலைக்
காரன்விழித் தீயில்வந்த காரணனை—நீ ரருவி
கொட்டுமயி லாசலத்திற் கும்பிட்டுக் கொண்டபின்னு
மிட்டுமயி லாரிடஞ்செல் லேன். (கசு)

கட்டளைக்கலித்துறை.

வனலங்கானிற் பரண்மீதிருந்த விளங்குறத்தி
பானலங்காமர்க் குருகிப்பணிந்தவன் பண்ணவர்க்கா
வீனலங்காதிபற் செற்றோன்மருக னெனத்துதித்து
நானலங்கான மயிலாசலத்தினை நண்ணினனே. (உ0)

கலிவிருத்தம்.

கண்ணல்கண்டு கமக்குமயிலம்வா
யூண்ணலோர்வர மாயினுநல்கிலான்

கின்னாநேர்முலைக் கிர்த்திகைபானுகர்
வன்னாவாய்ச்செயல் வன்மையில்வன்மையே. (உக)

கலிப்பா - மைதக்கினா.

வன்ன முலைத்துணைமைய வாய்மொழியைத் தாழ்குழலை
நன்னயந்சேர் கண்ணையிக நம்புமென்னை நத்துகில்லாய்
கன்னல்விற்கை மாரன் கடும்போர் விளைக்கின்று
னென்னடிநான் செய்வே னெழின்மயிலைத் தேந்திழையே.

நேஞ்சுவிடுதூது - தாழிசை.

ஏந்துபூண்முலை மங்கைமார்களை யேவிஞலவர் தங்களுக்
கின்பமெய்திட னுடிவாடியி றைஞ்சுவாரெழில் வண்டினம்
பூந்துணர்க்கடம் பாரமீதுபொ லிந்ததேன்மிக வுணடுதேன்
புந்தியின்றிம யங்குமஞ்சுகம் பொற்புயத்துற நற்கிளி
வேந்துடன்கமி கூருநாரைகண் மெல்லினப்பக ராதுபோ
மேகமாதிய யாவுமென்றன்வி ருப்பமுற்றுரை யாதவே
நேந்றதற்கினி தாருமென்றுயர் நெஞ்சமேபறி கின்றையா
னிடுசேர்மயி லாசலக்குக னேரினின்றுநி கழ்த்திடே. (உ௬)

நேரிசையாசிரியப்பா.

திகழ்த்தரும் பெருமை நிலவுதென்மலயத்
தகத்தியமுனிவற் கருளியவீறும்
பண்டுநக்கீரன் பருவரலொழித்துத்
தொண்டுகொண்டவிர்தரு தூயபுகழுங்

கருணையேவடிவ மாகக்காண்டரு
மருணையூர்ப்புலவற் களித்தசெந்தமிழுங்
கடனடுவிழிந்து கரைமடத்தவிர்தரு
திடமலிபாலைய ஞதியசித்த
ரெண்ணிலார்க்குதவு மெழிற்பெருஞ்சிறப்பு
நண்ணிநின்றன்பா ஞனும்வெந்தடுத்தே
னென்பெருங்குற்ற மியம்பரிதாயினு
நின்பெருங்கருணை நினைக்கரும்பாற்றாற்
றவிர்க்குமென்றுன்னித் தமிழ்கொடுசிறிது
கவித்தொடைவனையக் கருதினனுதலி
னெஞ்ஞிறக்கலாபத் தணிக்குடைபரிக்கு
மஞ்ஞைவாகனத்தின் மரகதவன்னக்
கிள்ளையோர்பாகங் கிளர்தரவொருபால்
வெள்ளைமால்களிறு மேனுள்வளர்த்த
பொன்னிறத்தன்னம் பொலிதரநடுவி
னுன்னியபதினு றுருவிலொன்றெடுத்தச்
சேவலுந்தண்டுந் திருக்கைவேலும்
பாவலர்பனுவல் பகர்வனபிறவுந
திகழ்தரவந்தருட் சேவைநல்கிப்
புகழொடுதவமும் பொருந்தவைத்தருள்வாய்
தென்னையுமாவுஞ் செருந்தியுங்குருந்தையும்
புன்னையும்பிறவும் பொலிதருசாரற்
குயிலினம்பாடக் குரங்கினங்கொட்ட

மயிலினமாடும் வளர்திகழ்மயில
மாமலைக்கோயில் மயினினிதமருங்
கோமளக்குமர குருபரக்குகனே. (உ௪)

வெண்பா.

குகனே மயிலமலைக் கோமானே யீசன்
மகனே யெனத்தினமும் வாழ்த்தி—முகமாறும்
பன்னிரண்டு தோளும் பதமிரண்டு நாடுநர்முன்
னென்னிரண்டு கைகுவியு மே. (உ௫)

துறை - கட்டளைக்கலித்துறை.

குவிக்குங்கைத் தொண்டரைக் காப்பான்மயிலக் குவட்டிறைவன், செவிக்கென்றுயரமெல் லாமுரைத்தாடருஞ் செய்பதமை, கவிக்கின்றதிங்கட் குடைமதவேடன் கணையை வென்று, புவிக்கணிறைந்த புகழ்வானத்தூடும் புகச் செய்ததே. (உ௬)

மடக்குக்கோச்சகக்கலிப்பா.

புகழனந்தமுறவாக்கும் பொருளுநல்குமுறவாக்கு
மிகலறுக்குமயிலமலை யிடம்சேர்க்குமயிலமலை
பகனெனினுங்களித்தாளும் வண்கொடிதூங்களித்தாளு
மிகவணிதற்செயவேளே வினைவிலக்குஞ்செயவேளே. (உஎ)

கலிவிருத்தம்.

வேளைக்குத விடுமெய்ப்பொருள் வினைவேரற வென்று
தாளைத்தலை மிசைவைத்தரு டருசண்முக முருகோன்

வாளைப்பொரு கண்ணருடன் மகிழுந்திரு மயில
நாளைக்கெனு மொழியின்பய னணுகச்செயி னலமே. (உ அ)

அறுசீர்விருத்தம்

நலங்குலவுமயிலமலைக் குமரேசன்றிருவடியை நண்ணி டாம, லிலங்கடொழுஞ்சென்றிரந்து பட்டசாமித்தனையென் றியம்பப்போமோ, கலங்கரியநெஞ்சகத்தோ டாறெழுத்தைத் தினந்தோறுங் கருதியன்பாற், றுலங்குபுகழ்க்கடன்மூழ்குங் கவுமாரர் வேடமிகத் தோய்ந்த நானே. (உ௯)

எழுசீர் விருத்தம்,

நானுநீயுமற் றனைத்துமொன்றெனப்பல ஞானநூல் சொலக்கேட்டு, மனுமாவிபு மொன்றெனுந்துணிவுகொண் டுழன்றிடவிடலாமோ, தேனுமாவுமுன் றருமொருகுறமகள் சிறுபதம்பணிந்தோனே, வானுளார்வரும் பொழின்மிகுமயி லமா மலையுடைக்குகவேளே. (௩0)

எண்சீர்விருத்தம்

வேள்விடும்பூங் கணைகள்வந்து தைக்கமேனி
மெலிவடைந்து வெண்ணகைவாய் மின்றருண்கண்
வாள்விடத்தா விறந்தமுதாற் பிழைக்குஞ் சிந்தை
வசமாமென் றனக்கிரங்கா வன்மையாதோ
கேள்வியுற்ற சிந்தைமொழி போதாதேயோ
கிளிதானென்றெனைப்பலகால் கிளத்திலாயோ

கோலவிலக்கு மயிலமலைக் கோயிலானே
குன்றமெதொறுநடமாடுங் குலததாட்கோவே. (௩௧)

மடக்குக்கட்டளைக்கலிப்பா.

கோவில்கொண்ட குறிஞ்சியிராகமே
கூறக்கேட்கை குறிஞ்சியிராகமே
வீவின்மேனி முதிர்ந்தவராகமே
வென்றமீண்ட தெதிர்ந்தவராகமே
காவிசெங்கடம் பப்புயமாலையே
கானவள்ளிக ணம்புயமாலையே
யாவியென்பவர்க் காட்சிமயிலமே
யன்பர்வேண்டருட் காட்சிமயிலமே. (௩௨)

குறளடிவஞ்சிப்பா.

மயிலெனநடித் தயிலெனவிழித்
தொயிலுறநடந துயிர்கவர்பவ
ரிருபூண்முலைக் கருதாமருண்
டருளாவலற் றிருள்பாழ்மனம்
போலும்பதஞ் சாலுங்கவி
மாலுண்டுளார் பாலுந்தினந்
தேனெனவினித் தூனேயுமுருக்
கினமில்கவி யானவில்கிலே -,னிதனுற்
செந்தகைக்கிரியெனச் சிகிமேல்
வந்தருள்செயத்தகு மயிலத்தரசே. (௩௩)

பதினைந்துசீர்விருத்தம்.

சேயநின்முகங்கள் பூதமோரைந்துந் திகழ்பரப்பிரமமு மாகுந், திறன்மலிதிரடோ ளகம்புறமெனநூல் செப்பியபன்னிருசமையந். தூயவர்விரும்புந் திருவடித்துணைபல் சுருதியாகமப்பொருண்முடிவு, துங்கவேலுலகைத் தருமவண்மற்றுஞ் சொலும்படையுருத்திரத்தலைவர், மாயவன்முதலோர் வணங்கிடுமொருவன் மயிலுடன்சேவலுமீசன், மலயமாமுனிவன் பாலையனனையார் வழிபடுஞ்சீடரிவ்வாறே, யாயசீரனந்த முடையநீயெளியேற் கருள்செயாதிருப்பதுமுறையோ, வருவிசூழ்மயிலா சலப்பெருங்கோயிற் கழகியகுமரநாயகனே.

வெண்பா.

நாயிற் கடையாகி நானிலத்தூ ரத்தனைக்கும்
போயிற் றுறுமிரக்கும் பொல்லேன்றன் — வாயிற்
றமிழ்மணக்கச் செய்தபிரான் றையனல்லார் கொங்கைச்
சிமிழ்மணக்குந் தென்மயிலச் சேய். (௩௫)

கட்டளைக்கலித்துறை.

சேயிலங்குந்திரு வுள்ளமுள்ளீ ரொன்று செப்புகின்றேன்
கோயிலங்குன்றக் குறிஞ்சியெங்கெங்குங் குறுகினொந்து
வாயிலங்குன்றி வருந்தாமலெங்கண் மயிலவெற்பின்
மேயிலங்குங்குமக் கொங்கைமின்னார்பொன் வெறுத்துய்மினே.

மடக்கு - தாழிசையிரங்கல்.

மின்னிலங்கிய வேலனென்கிற மின்னிணைக்கவி ருப்பி லான், மேவலார்க்கெம னானவேண்மகண் மேவநாடுத லோர்கி லான், பன்னிரண்டுசெ விக்குகன்சிலர்பன்னிடுஞ்சொல்வி னவிலான், பாடுவார்க்கருள் கந்தனீங்கிவள் பாடுகண்டுப ரிந்தி லான், மன்னிடும்புகழ்ச் சேந்தனைங்கனை மன்னிடும்பைய றுக்கிலான், வாரணக்கொடி கொண்டசேய்முலை வாரணத்து யர் மாற்றிலான், வன்னிசேர்கரத் தண்ணலார்மகன் வன்னி னைப்பைவி டுக்கிலான், மயிலமாமலை வள்ளலியான்பெறு மயி லின்மட்டினில் வஞ்சனே. (௩எ)

அம்மானை - வெண்டளை

வஞ்சமெல்லாந் தீர்க்கு மயிலமலை வாழ்முருகோன்
கஞ்சனரி யீசனுக்குக் கண்டனன்கா ணம்மானை
கஞ்சனரி யீசனுக்குக் கண்டனனே யாமாகிற்
கொஞ்சங் கருமங்கைக் கொண்டதே னம்மானை
கொண்ட தமரக் குலத்தினரா லம்மானை. (௩அ)

தாழிசையிரங்கல்

அம்மானையாடிக்க ழங்காடிமுத்தாடி யணிமேவுபந்
தாடிச்சிறுசோறு விளையாடி வெயூர்வாடி யயர்வின்றியே
செம்மானம்வருமட்டு முச்சில்லைத்தாடிச் சிரித்தாடியென்
சேலைதொட்டாடித் தினந்தோறுமறவாது சீராடுவாள்

பொய்ம்மானுடன்போன வன்றங்கைமைந்தனைப் பொறிமஞ்ஞையிற்
புகழ்கொண்டமயிலாசலச்சாரலிற்கண்டபோதேயெனைச்
சும்மாவிராதேய வன்பாலெனக்கானு சொற்சொல்லெனச்
சொல்லத்துணிந்தாளுறங்காளொனருசகநாடிக்கின்றதே.

வஞ்சிவிருத்தம்.

துடியடிக் களிற்றின் றோழனை
யடியர்சூழ் மயிலத் தண்ணலை
வடியயிற் கரத்து வள்ளலைக்
கொடியனென் றுரைக்கக் கூடுமே. (௩0)

கொச்சகக்கலிப்பா

கூடுமவர்க் கருள்வேளைக் கூடாரைக் கொல்சேயை
யாடுமருட் கொடியானை யாடாம லசைப்பானைத்
தேடுமன்பர்க் கெளியானைத் தேடாரைத் திருத்தானைப்
பாடுநருண் மயிலத்தைப் பாடாதார் பதர்தாமே. (௩௧)

ஊசல் - எண்சீர்விருத்தம்

தாமரைக்கண் முகுந்தனென வளர்ந்துகாட்டுந்
தனிமயிலா சலக்குவட்டிற் றவத்தோர்போலுந்
தூமணிமண் டபத்திலிரு மகளிரோடுந்
துவர்மேனி யெழிலோங்கத் தொண்டர்சூழ
வேமவடம் பூண்டவிர்செம் மணிப்பீடத்தி
லெழுந்தருளி யினியதமி ழிசைகேட்டும்பர்க்

காமகளி ரங்கைவழி யாடீருச
லயில்வேற்கைப் பெருமானே யாமேருசல். (௪௨)

இன்னிசை வெண்பா

ஊசற் குழையாடவார்க் குள்ளத்தை பொப்புவித்து
நாசப் படாத நலமளிக்க வல்லாயோ
மாசற்ற தென்மயில மாமலையில் வண்டுமொய்க்கும்
வாசக் கடம்பணிந்தே வா. (௪௩)

கட்டளைக்கலித்துறை.

தேவருக்குஞ்சசி கேள்வன்றனக்குஞ் சிவன்முதலா
மூவருக்குந்துணை யாமுருகாவென் று முன்னுமன்ப
ரியாவருக்கும்பொது வாய்மயிலாசலத் தெய்தினர்க்கே
பூவருக்குந்தள ராவுண்மைஞானப் பொருளெய்துமே. (௪௪)

கலிநிலைத்துறை

பொருசேவலணிகொடி மயிலாசலத்தெந்தை பெரிதுவாய்மையிற்
றருசேவையொருவாறு பெற்றோர்மலர்த்தா டலைக்கொள்வதே
குருசேவைமுதலாய பலபேறுமென்னுங் குணத்தோர்களாற்
றிருசேருமருமத்தன் முதலாகநூல்சொன்ன சிலருய்வரே. ()

அறுசீர் விருத்தம்

உய்பகல்வரந்தந் தாட்கொண் டுலகரோடுழலாவண்ணஞ்
செய்யநின் புகழேநாடுஞ் சிந்தையுந் திகைக்கலாமோ
பைபர வருந் துந்தோகைப் பரிநடம் பயிலுஞ்சோலை
மையறு மயிலக்குன்றில் வதிதரும் வளமையானே. (௪௬)

பாண் - தாழிசை.

வளமலிந்த மயிலவெற்பின் மன்னரென்னை முன்னைநாள்
வலியவந்தி ரந்தணைந்த வண்மையொன்று மறிகிலா
யளவிலாத வுண்மைசொல்லி யவைமறந்து வஞ்சமா
யவரிருக்கை நீதமென்ற றைந்திடத்த காதடா
பளபளத்த வேலணிந்த பன்னிரண்டு தோளிலென்
பாவிநெஞ்சி ருந்தும்வேறு பாவைமாரை நாடினார்
களவினீயு ரைத்ததூது போதுமீதில் பாணபோய்க்
கந்தர்பாலு நெஞ்சறிந்த கன்னியென்று பன்னிடே.

தவம் - வேற்றொலிவெண்டுறை

பன்னிரண்டுதோளானைப் பவளமலையனையானைப் பழுதிலாறு
சென்னியுடைக்குருபரனைத்திருமயிலக்கிரிபுரக்குஞ்சேயைநாளு
முன்னியுன்னி யுறங்கியுறங்கிடா
நன்னிலைத்ததவ ஞானிகட்கானதே. (௪௮)

எண்சீர்விருத்தம் - கட்டு

ஆனையுருவானதிரு ஞானமிசை தோன்று
மழகியசண்முகத்தொருசெல் குழவியினைமுன்னாள்
பூனையுய்யச்செய்தானைத் தேனைநிகர்பாடற்
பொழிவாருக்கருள்புரியும் விழிமூவாறுடைய
கோனைநெடும்பனிவரையின் மேனைமகடன்னைக்
கொற்றவைவேலெனக்கரத்திற் பற்றவல்லகுகனை

மானையொக்கும் விழியார்கண் டனமுறப்பவனி
வரும்பரனை மயிலவெற்பில் விரும்பியதென் மனமே. (௪௯)

## இரட்டையாசிரியவிருத்தம்

மனமுனதுதிருவடியை யல்லாதுமற்றொன்றில் மருவா திருக்குமியல்பும், வாக்குனதுபுகழன்றி வேறுவிதமொன்றை யும்வ ழுத்தாதவண்மைநெறியுந, கனபணிபுனக்கன்றிவே றொருவருக்குமுயர் காயமுயலாதநிலையுந, கமழுமபன்னிரிலை யில் வைத்தவெண்ணீறுகொடு கடையனேற்கமையவருளா வாய், புனமறமடந்தையொடு பொன்னகர்ப்பிடிதழுவு புய நிரைபொலிரதபுனிதா, புனலிகுரவங்கடம் பிரதிவரமு செச்சை பொற்பணியுடன்புனைந்தா, யனவரதநடநவிலு மரக தமயூரத்தி லயில வேலெடுத்துவருவா, யணிமயிலமலையினது தலையினிதம்விளையாடு மானந்தமுருகேசனே. (௫௦)

## வெண்பா.

ஏசகன்ற பல்பாட் டிசைநதபுகழ்த் தோள்களிலெல்லா
மாசடைந்த சொல்லும் வணைவானே - பூசனுக்குச்
சொன்னதனைக் கிள்ளையொடுஞ் சொல்லிமயி லாசலத்தின்
மின்னவிர்வேல் பற்றிநிற்கும் வேள் (௫௧)

## கட்டளைக்கலித்துறை.

வேளஞ்சித்தன்னுரு மாறித்திரிய விளங்கெழிற்சேய்
வாளஞ்சிறந்தகண் ணார்நடமாடு மயிலவெற்போன்

காளஞ்சிறிதுமில் லாப்பொருள்கேட்டுப்ந்த கண்ணுதல்பாற்
றுளஞ்சிவிகைபெற் றுத்துதிபாடிய தன்மையென்னே. (ருஉ)

கலிநிலைத்துறை

என்னேயமு நின்றிருக்கூத்து மிரண்டுமொன்று
மின்னேகளி கூரவைக்குந்திற மில்லைகொல்லோ
பின்னேர்சடை யான்முதலாகிய மேலவர்க்கோர்
மன்னேமயி லாசலக்கோயிலில் வாழ்பிரானே. (ருந)

அறுசீர்விருத்தம்

இரங்கல் - சிலேடை

வாழுங்கிளையி னிலைநீங்கி வளர்மென்முகைபா முலைபசந்து
சூழுமணையா ரிடைநாணிச் சோர்ந்துவாடித் தளர்வெய்தி
வீழுங்காய மிகக்காய்ந்து வேனிற்சகியா வியன்கோங்கெள்
பாழுமகள்போன் மயிலமலைப் பவளக்குகன்மால் படைத்த ந[illegible].

கலித்தாழிசை.

படையாலொரு முதுசூருடல் பப்பாதிய தாகப்
பண்ணுங்குகன் மயிலாசல நண்ணுங்களி யுடையே
முடைநாறிய வூனுண்பவர் முன்னேகியு நில்லே
முதிர்செந்தமிழ் பொழியுஞ்சில முனிவர்க்குற வாவோம்
விடையேறிய பரமன்றலை மீதுமுப லகனும்
விறன்மாயவ னதுசெங்கையின் மிளிர்கின்றவை வேவு
மடையாளமெ னக்கூறிடு மவருக்கிழி வுரையே
மயன்மாதைவெ றுக்காதவ ரறையும்புகழ் நமதே. (ரு[illegible])

எழுசீர்வண்ணவிருத்தம்.

தனதந்தனதனதானன—தனதான.

நமனஞ்சியபெரியோரவர் தவமிஞ்சியபயனுமென
நவிலும்பனுவலைநாடொறு—மிகழ்தீயோர்
தமரென்றுழல்வதுபோயநு தினநின்பணிபுரிவேனொரு
தரமிங்கிதமயின்மேலெதிர்—வருவாயே
குமரன்குருபரன்வேள்குகன் முருகன்சரவணநீர்தரு
குழகன்றனையெனவோதுநர்—செவியூடே
யமலன்பெறமொழிதாரக விபரஞ்சொலிமயிலாசல
மதினின்றருள்பொழிசீர்திகழ்—கிழவோனே. (௫௬)

மருட்பா.

கிழமுனிவன் வேடமிட்டுக் கேகயத்தை விட்டுப்
பழகிவசஞ் செய்துகுறப் பாவை—குழல்சரியச்
சேர்ந்தனி கூர்வான் றிகழ்திரு மயிலந்
தார்ந்தமெய் யடியவர்க் கஞ்சிக்
கூர்ந்தபூங் கணையான் கும்பிடல் வியனே. (௫௭)

கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வியன்றார்கமலமலரினமே விளம்புமுலகமலரினமே
வெள்ளைநிறத்துக்குருகினமே வெண்முனிறத்துக்குருகினமே
கயலின்குலமேகேதகையே கருத்தைச்சுடுமேகேதகையே
கருங்குவளையேகடனுரையே காணேன்வளையேகடனுரையே

புயல்வந்தருந்துங்கசப்புனலே பொருந்துமுறவுங்கசப்புனலே
புளினத்திடரேயளப்புனையேபொல்லாதிடரேயளப்புனையே
வயமிக்குளவன்பேரொலியே மயிலத்தொருவன்பேரொலியே
மயலினிலையஞ்சகியேனே வந்தாளிலையஞ்சகியேனே. (௫௮)

வெண்பா.

ஏனமற மங்கைவைவேற் கிட்டானை யிடில்பசுங்
கானமற மங்கைவைவேற் கைக்குகனை—ஞானமற
மங்கையத்த ரேயா மயிலத்திற் கண்டுசென்னிக்
கங்கையத்த ரேயா கலாம். (௫௯)

கட்டளைக்கலித்துறை.

கலையானவத்திர வாணிபுகழுங் கவின்மயில
மலையானவத்திர வாணிங்கையையும் வாழ்விக்கும்வே
ணலையானவத்திர வாணிபங்குன்றொடு நந்தவென்றோ
னிலையானவத்திர வாணித்தர்போலு மியல்பினர்க்கே. (௬0)

அறுசீர்விருத்தம்.

இயல்வளமுமலைவளமும் பொழில்வளமும் புனல்வளமு மிமையார்போற்றும், புயல்வளமுமற்றுமுள்ள பலவளமுந் திகழ்மயிலம் புரந்தசெவ்வேள், கயல்வளங்காட்டியநெடுங்கட் குஞ்சரிக்குங்குறமகட்குங் கணவன் செந்நெல், வயல்வளத் தண்மருதமுத னிலத்துஞ்சென்றுடி வருதலுண்டே. (௬௧)

ஊர் - எழுசீர்விருத்தம்.

வருமமின்றிய தொண்டருக்கருட்செயு மயிலமாமலைச் சேய்க்குத், திருநிலாவிய பரங்கிரியேரகஞ் செந்திலம்பதி சோலை, மருவுமாமலை யாவினன்குடிமுதல் வண்டமிழ்ப்புல வோர்சொல்,பொருவிலாயிரங் கோடிகளாகிய பொருப்பெலாந் தனதாமே. (கஉ)

அடிமடக்குக்கோச்சகக்கலிப்பா

தனம்பகமா னவர்மீதே தனம்பகமா னவர்மீதே
வினம்பரவு பதியென்று வினம்பரவு பதியென்று
வுனம்புயத்தாட் டுதியாதோ வுனம்புயத்தாட் டுதியாதோ
கனம்படரு மயிலமனே கனம்படரு மயிலமனே. (கங)

சித்து - தாழிசை

அமலன்புகழ் மயிலாசல மகில்வாழ்சிவ ஞானிக்
கருள்செய்தயி லணிதோளுட னருகிற்றிகழ் சித்தன்
றமரென்றுள பலசித்தர்க டந்தாண்மலர் மகரந்
தலையிற்புனை தருசித்தர்த மைப்பேணிட லுள்ளே
மேமதன்மைவி டாதேபல மீயங்கொடு வந்தா
லெண்ணூறுவ ருடமாயுளி லங்கச்செய வல்லே
முமலத்தடை யறியேமிரு நாகந்தரு வாயேன்
முன்கட்டிவெ ளுக்கச்செயு முறைபுந்தெரிவேமே. (கச)

இதுவுமது - எண்சீர்விருத்தம்

வேமப்பான் முழுக்காட்டி யாடைசாத்தி
வெண்ணீறு மிகப்பூசி வேணமட்டு
மேமப்பாத் திரத்திலன்னம் பருப்புநெய்பா
லிருமூன்று சுவையுடனீ யிந்தாயானு
மியாமப்பா லியைந்தரச வாதஞ்செய்வோ
மிராப்பகன்மா றிடப்புரிவோ மிவையல்லாமற்
சேமப்பாங் குறுமயில மலைப்பொற்கோயிற்
றிருக்கைவேற் சித்தர்தம்பேர் செப்புவோமே. (௩௫)

வெண்பா

செப்பரிய பல்சீர்த் திருமயில மாமலையிற்
றப்பனைய மேனிச் சுராதிபனை—யெப்படியுங்
காணும லென்றன் கலிதீர மாட்டாது
நாணும லுந்திரியே னன். (௩௬)

கட்டளைக்கலித்துறை

நானங்கமழு மயிலாசலத்தி னடிக்குமருட்
கோனங்கமழு மயிலாசலத்தினர் கும்பிடுந்தா
ளானங்கமழு மயிலாசலத்தின னன்றடற்சூர்
வேனங்கமழு மயிலாசலத்தினல் வீட்டிடுமே. (௩௭)

கலிவிருத்தம்.

வீட்டு நேய மிருந்துனை நாடிடுமென்
பாட்டு மாலை பரிந்தருள் செய்குவையோ

காட்டு வள்ளியைக் காவுடை யான்மகளிற்
கூட்டு வாய்மயி லாசலக் கொற்றவனே. (௬அ)

சம்பிரதம் - தாழிசை.

கொற்ற வர்க்குமுயர் மாதவர்க்குமொரு
கோவெனக்குலவு குமரவேள்
கோழியங்கொடிகொண் மயிலவெற்பிலிரு
கோதையர்க்குநடு மேவுவா
னற்றமீதெனவ றிந்தளிக்குமுரு
கையனெய்யொழுகு மயிலிறை
னம்புயக்கழனி னைந்துதெண்டனிடு
மன்புகொண்டுதமிழ் பாடினன்
மற்றவர்க்குநிகர் வாழ்வெய்தாதுடலு
மனமும்வெள்ளைநிற மாகிடு
மாநிலத்திழிவெ றும்புமோர்பெரிய
மலையெனத்திகழும் விழியினீர்
வற்றலின்றிவரு நல்வினைப்பயனும்
வம்பதாமணியும் வெண்கலை
மண்ணடைந்துநிற மாறுமெண்ணில்பல
வாயிலிற்புகலு மாகுமே. (௬௯)




எண்சீர்விருத்தம்.

ஆகுமதை யழிப்பதற்கு மழிவதனை யாக்குதற்கு
மயில்வேற்கைக் குருபரனை யன்றியிலை யெனத்தேறிப்

பாகுநிகர் தமிழ்ப்பாடல் பலபாடிக் களிகூரும்
பழையோர்கள் பெற்றபயன் படிறேனும் பெறவேண்டி
யோகுடையார் மணிபொதியை யுயர்திருச்செந் தூரருணை
யொளிர்திருமா மலைபொருநை யுருமலையா தியதலந்தோ
றேகுமதிற் சலிப்பெய்தி யெழின்மயிலா சலக்குவட்டி
லின்றுவந்து பரவுகின்றே னினிநடப்ப தறியேனே. (௭௦)

வஞ்சித்துறை.

அறிஞர்சூழ் மயிலத்
தெறிகதி ரெழிற்சேய்
வெறிகமழ் மென்றாட்
குறிகொளல் குணமே. (௭௧)

மறம் - வெண்பா.

குணப்பிசகுந் தோள்வலியுங் கொண்மறவர் பெண்ணை
மணப்பதற்கு மன்னனிச்சை வைத்தாற் - கணப்பொழுதி
லந்தப் புரத்திருக்கு மாயிழைமா ரெல்லோரு
மிந்தமயி லத்துறுவா ரே. (௭௨)

இதுவுமது கட்டளைக்கலித்துறை.

வார்வேல்புரக்கு மயிலாசலத்து மறவர்கொம்பைச், சேர்
வேனென்றெண்ணு மரசேவுந்தூ தருந் தேயவழக், கோர்
வேம்பைக்கட்டுத லன்றோ முன்கற்பகத் தூறொழித்த, சீர்

வேங்கைக்கொவ்வுங்கொன் யாப்பட்டபாட்டைத், தெளிந்து சொல்லே. (எ௩.)

### கலிவிருத்தம்.

சொல்லு மாய்ப்பொரு ளான சோதியை
யல்லு மாய்ப்பக லாகி யல்லதைப்
புல்லு மாறெழின் மயிலப்புங்கவ
னெல்லு மாறுமா முகங்க ளோதுமே. (எ௪)

### எண்சீர்விருத்தம்.

ஓதும்பனுவற் றொகையாவையுநின் னுபயக்கழல்சூ டிடு முன்னாயுணர்ந், தேதுங்கனவிகன் றுரையாவழியா லெனை யுந்தருவே னிடையத்தகுமோ, காதுஞ்சிலைவே டர்புனத்தின ளுங் ககனத்தினர்கள் ளிகையும்புரியும், வாதுங்களியா கிர டிப்பவனே மயிலத்தொருநல் வரமின்றருளே. (எ௫)

### துறை - தாழிசை.

மின்றயங்கும்வடி வேலணிதோளுடை விகிர்தன்
விரைமலிந்தபணி நீபமுளான்வியன் மயிலக்
குன்றடுத்துமயின் மேல்வரல்கண்டத னாலே
கொண்டமையலென நின்குறிகூறுது கோதாய்
நன்றவன்றருசு கம்பெறுவாய்மலை யாதே
நானுரைத்ததுபொ யல்லநிஞணைமெய் நம்பா

யென்றனக்குநிறை நாழியினெல்லொடு சோறு
மெண்ணெயுங்கலையு மீந்துவிடிப்பொழு தம்மே (௪௬)

இதுவுமது - அறுசீர்விருத்தம்.

அம்மாவென்குறி கேளுன் றனக்குஞ்சுந்தர மீகை
கம்மாபோமென்றி ராதே தூயமயில மலைவா
ழெம்மான்றன்புயஞ் சேரு மின்பக்கடலை நல்கு
மைம்மான்கட்புன னீங்கி வருத்தந்தீருள மகிழ்ந்தே (௪௭)

கட்டளைக்கலிப்பா.

மகிழுமாமலர் மாலிகைமாரவேண்
மலயக்காலில் வரக்குயில் வாய்விடச்
சகிகணிந்தையு மம்புலியுஞ்சுடத்
தையல்வாடித் தயங்கிடலாகுமோ
வெகினமூர்தியைக் குட்டியகையனை
யீசன்மால்பணிந் தேத்தியமெய்யனே
முகிலுறுமயி லாசலத்தையனே
முத்தமிழ்ச்சுவை முற்றுணர்தெய்வமே (௪௮)

இரட்டையாசிரியவிருத்தம்.

தெய்வங்களத்தனையு மொன்றெனவுணர்த்திடத் திருவுரு வெடுத்த தெய்வஞ், சிவசமையமுதலாகு மறுவகைச்சமைய முந் தெண்டனிடநின்ற தெய்வம், பொய்வலித்தானவர்கள்

வழியொழித்தமரர்வளர் பொன்னுலகளித்ததெய்வம், பொறி யனையகுஞ்சரிமு லைத்துணைக்களபம் பொலிந்தமார்புடைய தெய்வ, மைவனக்குயிலனைய வள்ளிமின்றந்ததினை மாவினின் மகிழ்ந்ததெய்வம், வண்டமிழ்ப்புலமைதிகழ் கவுமாரருக்கினிய வரமெலாமுதவுதெய்வம், வைவதற்கஞ்சாத கொடியேனை யன்றுதிரு மலைமீது காத்ததெய்வ, மயில்வாகனத்தெய்வ மயி லார்புயத்தெய்வ மயிலாசலத்தெய்வமே. (எசு)

நிலைமண்டிலவாசிரியப்பா

தெய்வப்புலமையுந் திருப்புகழ்ச்சிறப்பு
மைவகைப்பொறிகட் கடங்காவறிவுந்
தொண்டர்தம்பணியுந் தூயநெறியு
மண்டலத்தரையரும் வணங்குமாண்பு
மன்னபல்சீரு மடைவதுகுறித்து
நின்னருட்பேறு நினைதருநெட்டுயிர்த்துத்
தோகைமாமயிலைச் சுடர்ச்செஞ்சூட்டு
வாகைவெண்சேவலை வடிவேற்படையை
முவிலைச்சூல முதிரொளிவயிர
மாவிலம்படல்வாள் வயங்கெழிற்கேடகஞ்
சக்கரஞ்சங்கந் தனிக்கயிறங்குச
மிக்கசீர்ப்பணிகண் மிகவணிந்துள்ள
பவளமால்வரைநேர் பதினறுருவிற்
றவளவெண்ணீற்றுச் சங்கரன்பரவுஞ்

சிற்சிலவற்றொடு தினந்தினங்கருது
நற்செயல்பொலிந்த நாயினேன்மனத்தைத்
தளர்வொடுசலியாத் தகையுறப்புரிவா
னளவில்பேராட லலைபுனற்பொருநைத்
திருவுருமாமலை யாதியிற்செய்து
பருவம்வந்தடுத்தது பததேறலென்ன
விருதரங்கூறி யிறுமாப்புய்த்தும்
பருவரன்மிடியிற் பட்டார்போலப்
புல்லர்தம்மனைகளிற் போய்வரவிடுத்து
நல்லறல்கடுக்கு நறைக்குழன்மகளிர்
கணையிணையிணைவிழிக் காமர்கனிவாய்
துணைமுலையிளநலந் தொய்யின்மென்றோ
ளிருணிகர்வேளர சிருக்கையாதியினு
முருவரச்செய்தனை யொருகணத்தொருதர
மாதலின்மருண்டன னருணகிரியென்
றோதலும்பிறவு மொளியாவண்ணங்
குழீஇயமுனிவர் குழாத்தொடுமாசு
கழீஇயமதிநிகர் களிற்றிற்றோன்றித்
தகர்கொணர்வீர வாகுத்தலைவ
னிகரெனவிளங்கவெண் ணீறளித்தருள்வாய்
பைம்புயற்புனலைப் பவளமேய்க்குஞ்
செம்புகர்வேழத் திரணொடுந்தடக்கைப்
புழைவழியுறிஞ்சும் புதுமலர்ப்பொதும்பர்

தனழவமயிலா சலப்பெருங்குவட்டிற்
குலவுபொன் மதிற்றிருக் கோயி
னிலவுசீர்பொறுத்த நிமலசற்குருவே. (அ0)

மதங்கம்-வெண்பா.

சற்குருவாந் தன்மைத் தவத்தோர் தமைமறந்து
நிற்கு மிசைமதங்கி நீலவிழி—பொற்குவட்டை
யன்னமயி லாசலத்தா னறிருதோ னடியதா
வின்னமசை யாதிருந்த தே. (அக)

இதுவுமது-கட்டளைக்கலித்துறை.

இருங்குலங்கொண்ட வயிரவர்போற்று மிகன்மதங்கி
வருஞ்சூறைக்காற்றெனச் சீறிசினந்தழல் வாய்திறந்து
பெருஞ்சூதரான புறமதத்தோர்களைப் பெய்த்தருந்திக்
கருஞ்சூதங்கொன்றபி ரான்மயிலாசலங் காண்பவளே. (அஉ)

இதுவுமது-அறுசீர்விருத்தம்.

பவச்சாதியாமதங்கி தருநரம்புபஞ்சினுக்கும் பருவநல்கு,
மூவச்சாவவெய்யின்முள்ளிற் றவிப்பாரைக்கழல்புரக்கு மன்
றிப்பின்னுந், தவச்சார்பிலுயர்வசிட்டன் கைக்கொண்டான்
மதனடியார் தவிர்ப்பார்கொல்லோ, நவச்சாமைப்பயிரெள்ளா
மயிலத்தானன்பர்சொல்லு நவைச்சொற்கேட்டே. (அந)

### கலிவிருத்தம்.

கேட்டினுக்கு ளஞ்சினின் கிளித்தமிழ்க்கிளத்துவேன்
மாட்டிரங்கி டாதிருக்கும் வன்மையென்ன நன்மையோ
கோட்டினத்து யர்ந்தவண்மை கொண்டதானமயிலம்வாழ்
தாட்டிகச்ச டானனச்ச ரோசமுற்ற தலைவனே. (௮௪)

### எழுசீர்விருத்தம்

தலையாலன்புடனே யுனைச் சந்ததமுட்பணிவேன்
முலையானைக்கிடைபோ மன மூடமொழித்தருள்வா
யிலைவேல்கொண்டவனே தக ரேறியசேவகனே
யலைசூழ்பார்புகழ்சீர் மயி லாசலவித்தகனே. (௮௫)

### எண்சீர்விருத்தம்.

வித்தையாலும்வ ருந்திடா நான்வி ரைப்பதாம்புயம் வேண்டுவேன், முத்தைவென்றவெ ளீறணிந்தொரு முத்து முந்தரவல்லையோ, தத்தையொன்றுகு லாவுதிண்புயச் சண் முகாமயி லாசலத், தத்தைதங்கையோ டாடல்கண்டுவப் பான சீர்புனை யண்ணலே. (௮௬)

### பதினொருசீர்வண்ணவிருத்தம்.

*தன்னத்தனதன தானன—தந்ததானு.*

அண்ணற் கொருபொருள்பேசுநின்
வண்மைப் புகழ்மிகவோதியு
மன்னச் சிறுநடையார்மயன் மிஞ்சுகிறேயன்

விண்ணைப் பழமுனதாறிரு
நன்மைச் செவியினுளெகியென்
வெம்மைக் கலிநிகடுமாறுபு — ரிந்திடாதோ
பின்னாத் துணைமுலைவேடுவ
மின்னுக் கெதிர்பசிமீறிய
நின்னைக் கிழமுனியாயுமி — ரந்துளானே
வண்ணத் தமிழ்மயிலாசல
நண்ணித் தொழுமடியார்களை
வன்மைச் சமனணுகாதருள் கந்தவேளே. (௮௭)

பதினறுசீர்வண்ணவிருத்தம்.

தானதனதத்ததன - தனைதானா.

வெளணிமலர்ச்சமரு மீனமலிவுற்றபுலை
மேவியநெறிக்கயவர் — பகையும்வினை
வீடுதொறலைக்குமிடி நோயுமிகலிற்றமியன்
வேதனைபொறுத்துழல்வ — தறிகிலாயோ
காளவிடமிக்கொழுகும் வாயரவினைப்பருகு
கானமயிலிற்கலப — நிழலினூடே
கோதலிருவர்க்குநடு வேலுடனுதித்தளவில்
காலபயமற்றநிலை — யுதவுவாயே
வாளவுணருக்கரச தாமெனமுளைத்தநெடு
மாமரமறக்கறுவு — புயவிசாகா

வாரணமுகத்தனைய னொடுபகைத்துலக
மாதிரமுழுக்கவலம் வருகுமாரா
தாளநிகர்பொற்புமுலை மாதரணைவர்க்குமொரு
சாமியெனமெச்சிடினு மகிழ்குகேசா
தாரணிதுதிக்குமயி லாசலமுகட்டில்வரு
தாபதர்தமக்கருள்செய் தகையுளானே. (அஅ)

காலம் வெண்பா

ஆனந்த கின்பநினி யாவதெனும் காலமற்ற
ஞானபரா னந்த நமக்கருளவான்—வானளவுஞ்
சீரார் மயிலமலைச் செவ்வே ளெனவிளங்கும்
பேரார் குருபரப்பி ரான். (அக)

இதுவுமது-கட்டளைக்கலித்துறை.

பரப்பியதென்றற் கனல்காட்டிமாங்குயிற் பாட்டொலிக்கு
வரம்பெறுமாநதி நீருண்டவேனின் மயிலமலைச்
சிரப்புனைதாளுடைச் செவ்வேண்மயலிற் செலுத்துமென்றுற்
றரம்படுகார்பனி யென்செய்யுமோவிளந் தையலையே. (கூ)

இதுவுமது-எண்சீர்விருத்தம்.

தையலுக்கு முலையரும்பு முதிராக்காலஞ்
சரசநய மொழிப்பயனுஞ் சாராக்காலம்
வெய்யமதன் கணையெடுத்து வெகுளாக்காலம்
வியன்கழங்கம் மானைமுச்சில் வெறுக்காக்காலம்

பையணைய நடிகடப்பூ மலராக்காலம்
பழையமத நூல்சிறிதும் படியாக்காலம்
வையமுதன் மூன்றுலகுந் துதிக்குந்தொல்சீர்
மயிலமலைக் குகன்மோக மவிந்ததன்றே. (௪௧)

பன்னிருசீர்த்தாழிசை.

மலியுங்கருணை விழியான் வானோர்பரவு பெருமான்
வடிவேன்முருகக் கடவுண் மயிலமலைச்சண் முகனை
யொலிதங்கியதிண் கழல்சே ருபயசரணங்கருதி
யுருகித்தொழுமெய் யடியார்க் குரியபணிகள் புரிவார்
கலிமையமதனை விதியைக் காலன்றனையுண் மதியார்
கலைக்கடலிற் சுழலார் கமழ்செந்தமிழ்முற் றுணர்வார்
புலிமைக்கரியை யுரித்தார் போலுஞ்சிலரைப் பணியும்
விதச்சமைய மாறும் புகழத்திகழ்கின் றவரே. (௪௨)

எண்சீர்த்தாழிசை.

திகழுஞ்சண்முகப் பண்ணவன் வீரஞ் செறிந்தபன்னிரு
திண்புயன்றேவர், புகழும்வேலுடைச் சேவகனண்மை பொ
லிந்தசேவலம் பொற்கொடிக்கார, னகழுஞ்சாகரஞ் சூழ்புவி
மெச்ச வமர்ந்தசீர்மயி லாசலத்தண்ணா, லிகழுஞ்சிந்தையு
மேனியுமாட்கொண் டிடத்துணிந்தனை யாரறிவாரே. (௪௩)

பன்னிருபதினறுசீர்ந்தாழிசை.

ஆரார்செஞ்சடைப் பரமனார்விழி யழலினுதித்த முருக
வேலாகத்தியன்முத லானதொண்டருக் கருள்விளக்கமுன்

னளித்தவன், வாரார்பூண்முலைக் குறத்திகுஞ்சரி மருவுந்திண் புயவானவன்-மயிலமால்வரை யருவிநீர்மிக வந்துபாயுநல் வய லிலே, யோராருமுவர் களித்துமையல்கொண் டேப்பமிட்டுவந் தடுப்பதா-லினித்தமொழிகள் பேசிச்சரசத் தினங்கிநாழிகை போக்குறீர், காரார்மென்குழல் சரியப்பெரிய களபமுலைகள் குலுங்கிடக்-கவிழ்ந்துநிமிர்ந்து நாற்றையெடுத்துக் கையானடு மின் பள்ளீரே. (௪௯)

சவலைவெண்பா.

ஈரம் பொருந்தா விதயத் தெளிவேனை
வாரம் பெருத்து வலிதாண்டா
ஞரம் பொலிமயிலத் தன்பர்பகை மாற்றுதற்காம்
வீரம் பெறுங்கதிர்வேல் வேள். (௫௦)

ஏகபாதம்-கட்டளைக்கலித்துறை.

வேளைக்கருளு மயிலத்தன்றன்னை விரும்பனன்றே
வேளைக்கருளு மயிலத்தன்றன்னை விரும்பனன்றே
வேளைக்கருளு மயிலத்தன்றன்னை விரும்பனன்றே
வேளைக்கருளு மயிலத்தன்றன்னை விரும்பனன்றே (௫௧)

மறுதை-தாழிசை.

நன்றேவருகச் சிவபெருமான் ஞானகரமே வருகமறை நாலுமுணராப் பொருள்வருக நறைப்பூங்கடம்பு மலர்பவளக்,

குன்றேவருக மயிலூருங் குருந்தேவருகக் கனகநகர்க்கோ மான்மகள்சேர் குகன்வருகக் குறத்திகணவா வருகவிரைந், தின்றேவருகக் களிறேறி யின்னேவருகக் கழறியவா-றியற்றி யாளவருகவுன தின்பங்கொடுக்க வருகவருண், மன்றேவருகப் பலகோடி மலையாய்வருக வருகவே-மயிலாசலத்தில் விளையாடும் வாழ்வேவருக வருகவே. (கள)

எண்சீர் வண்ணவிருத்தம்.

தனதனதனதனதனனதனன.

வருபலகனவினி லொருவாசகமே
மகிழ்வுடனுரைசெயு முருகோனிமையார்
தருமகளழகிய குறமாதுடனே
தறுகிய மலைகளி லுயர்வானதுகே
டிருவருள்வளமுறு சிவஞானியைநேர்
சிலர்பிரணவமத னுரைதேறியதா
லிருமையுமெளியவர் பெறுமேன்மையிலு
லிசையொடுவளமிகு மயிலாசலமே. (கஅ)

தாவை-முடுகுத்தாழிசை.

சலனமற்றதிரு மயிலவெற்பிலரு டழைவுறக்குரவை யிடுமினோ-சண்முகக்கடவுள் வள்ளிகுஞ்சரித மக்கெனக்குரவை யிடுமினோ, வலமிகுத்தவொரு சேவல்வேல்கலப மயிலெனக்குரவை யிடுமினோ - வண்டமிழ்ச்சுவைம லிந்திடப்புல

வர் வாழ்வுறக்குரவை யிடுமினோ, நலமனைத்துமுத வத்தகுந்த சிவ முனிமுன்குரவை யிடுமினோ, நானிலத்துயிர்கண் மிடியி லாவுவகை நடுவுறக்குரவை யிடுமினோ; குலமறைப்பகுதி யாக மத்தினொடு கூடிடக்குரவை யிடுமினோ, கோதையீர்சிறிய கொங்கையீரளவில் குமரியீர்குரவை யிடுமினோ. (௪௰௯)

நேரிசையாசிரியப்பா.

மின்னவிர்ந்தாங்கு மிளிர்கதிர்வேலும்
பொன்னவிர்மஞ்ஞையும் பொருதகர்ப்பரியுங்
களிறுஞ்சேவலுங் கழறுவபிறவும்
வெளிறுநீறணிந்த மேனியும்விளங்கப்
பரசிவன்றிருமால பதுமப்புத்தே
ளரசிலைபோன்றே யவிர்தருமல்குற்
சசிமினாள்கணவ னுதியர்சார்தரப்
பசிமுதலொழிந்த பல்லோர்சூழக்
கந்தநாயகனைக் கவின்றிகழ்பொதியை
மந்தமாருதம் வரப்பெறுமயிலத்
தந்தணர்போற்ற வமர்பெருந்தகையைச்
செந்தலைப்பைந்தலைத் தேவியரிருவர்
நடுவினிதமரு ஞானபண்டிதனை
மடுவினுமொருக்கால் வந்தசண்முகனை
யேத்துவாரேத்து மியல்பினுக்கிசைந்த
நாத்துணைவாணி நவைதவிர்முதுநூல்

கறமுழிவணங்கும் கான்மலர்படைத்த
முற்றுணர்புலவனை முருகக்கடவுளைக்
கனவினுநனவினுங் கண்டுவப்பெய்திச்
சினமறக்களைந்து திரும்பாமுத்தி
வீட்டுறக்கருதி வியன்றமிழ்மொழியாற்
பாட்டுரைத்தணியும் பழங்கவுமாரர்க்
கணிமலர்ப்பொதும்ப ரடர்ந்தபல்குறிஞ்சியும்
பிணியறுத்தழியாப் பெருமைநல்கும்
புனிதப்பூசையும் புரைதவிர்நாட்டமுங்
கனியுமெய்யுணர்வுங் கழிக்கருந்திருவே. (ள)

முற்றிற்று.

வேலுமயிலுந்துணை

வெண்பா.

மயிலமலைக் கோயிலுக்குள் வாழ்முருக வேளைக்
கயிலதனைப் போற்றுமவ னன்பாற்—பயிலுங்
கலம்பகத்தைக் கற்குமவர் கல்வியறி வென்னு
நலம்பகம்பெற் றுய்யு நரர்.

சிவ சுப்பிரமணிய குமரகுருபர முருகக்கடவுள்சகாயம்.

## வாழி.

எண்சீர்விருத்தம்.

அழகியசண் முகத்தொருமெய்க் கடவுள் வாழி
யமரர்குலா திபன்வளர்த்த வணங்கு வாழி
குழலுடைப்பூங் குயிலனைய குறத்தி வாழி
கொற்றவைவேன் மயில்சேவற் கொடிச்சீர் வாழி
பழமறையோ லிடுமயிலப் பொருப்பு வாழி
பத்திநெறிக் கவுமாரப் பண்பு வாழி
மழவிடைக்கோ னனையசிவ ஞானி வாழி
வையகமும் வானகமும் வாழி மாதோ.

குருபாதமேகதி.

# தெய்வமே துணை

---

முருகக்கடவுடுணை.

# மயிலாசலத் திருப்புகழ்.

---

காப்பு—வெண்பா.

அயிலத்த னாறுமுகத் தைய னனந்தஞ்
சயிலத்தி லாடுந் தலைவன்—மயிலத்துச்
செவ்வேண் மகிழத் திருப்புகழாற் போற்றுதற்குக்
கைவேழ மாமுகத்தோன் காப்பு.

## நூல்.

தனதனதத்தனதானன - தனதான.

பருவரதிக்கிணையாமெழில்
வதனமலர்த்தொகையாறொடு
பழுதறுசெச்சைகுலாவிய மலைபோலே
பகர்தருபொற்புறுமாதிரு
புயமுமிரட்டையதாமுயர்
பதமுநினைத்துருகாதவெ னெதிரேநீ
திருமுடிவச்சிரவாகுவ
லயநிரைகொத்துமதாணிகள்
சிறுமணிகட்டரைஞாணிகர் பணியோடே

திகழ்மயில்குக்குடகேதன
மனையவைதொட்டிருந்தபேரொடு
சிகிமுகதுகிற்றருஞ்சேவைப் முளைநாமோ
குருமணியொத்தொளிர்கோமள
வடிவமுடைக்குமராவட
குவடெனும்விற்குரியார்பணி குகவேளே
குமரியொருத்திவிசாரமோ
டுருகவனத்திடைபோயொரு
குறமகளைத்தொழுமார்வம துடையோனே
மருமலிகற்பகநீழலி
லாசுசெலுத்தும்வலாரிதன்
மகளையிடத்தின்முனோர்மொழி பகர்வோனே
வரியளிமொய்த்துளதாமரை
யணிமிகுபற்பலவாவிகொண்
மயிலமலைக்கரசாகிய பெருமாளே. (௧)

தனனதானனத்தானனதனதன - தனதான.

களபபூதரப் பூண்முலைமகளிரை
வழிபடாதுனக் கேபணிபுரிபவர்
கருணைஞானவித் தாகியபிரணவ முணரோரே
கடுவைநேர்மொழித் தீமிகவுடையவர்
மனைகடோறுமுற் றுயிர்நயமொழி
கழறுநாவலர்க் கோரிடியெனமிக மிளிரோரே

குளவிபோலருட் சீர்கொடுகிலவிய
முனிவர்தாண்மலர்த் தூளணிதலையினர்
குலவுபோரவைக் கூடதிபுவகைபொ டமரேனே
குருகுகூவெனக் கூவிநிமுனமிரு
சிறகைமோதநடற் சேவலேயெழுதிய
கொடியையேமிகப் பேசிடமொருநல மருள்வாயே
சனமெலாமிகச் சோவெனவலறிய
வமரர்கோனுவப் பாகிடநிசிசரர்
தமதுவாழ்வறச் சாடியகதிரயின் முருகோனே
நவநீறுமிக் கார்திருவுருவின
ரிமயமால்வரைக் கோன்மகள்கணவரோர்
சரபானனமுற் சாகர்முனுதவிய புதல்வோனே
மணமருமலர்ச் சோலையின்மதுவெறி
பெருகுகோடரத் தாவெறிபடிகனி
வளகயெலாமிழுத் தோடியவருவிகள் பலவாலே
மருதமாதியிற் காதரமெனவளர்
கிரிகளியாவுமொப் பாகிடலரிதெனு
மயிலமாமலைக் கோயிலின்மருவிய பெருமாளே.( )

தனனத்தனதன - தனதான

கடலைப்பருகிய முனியைப்புகழ்பவர்
கழலைப்பணிவது தவிராதே

கதிபெற்றுனதருள் வெளியிற்புகுமவர்
கவிதைச்சுவையினை மிகழாதே
சுடலைப்பொடியணி சிவனைப்பரவிய
சுகுணக்கவுணிய முனிபோலே
துரிதத்தமணர்க ணிகர்துர்ச்சனர்வலி
தொலையச்செயும்வர மருள்வாயே
விடலைக்கனிபய றொடியற்கினியவர்
விழையத்தருமொரு துணைவோனே
விரைமுற்றியகுர வலர்பொற்புறுபுய
மிசையுற்றிலகிய கிளியோனே
நடலைக்கவுரவ ரவையிற்செலுமிரு
நளினக்கழலினன் மருகோனே
நதிபற்பலதரு மயிலக்கிரிமிசை
நடமிட்டருளிய பெருமாளே. (ந)

தனதானதத்ததனதன-தனதான.

பழகாத துட்டர்மனதையும்
விழியாலுருக்கிநலநகர்
பழிகாரி கட்குமலர்கொடு திரியாதே
பலியோடுபற்றிமகிழ்வுறு
பெரியோரை நித்தமிகழ்பவர்
பகர்வாச கத்தைநலமென மதியாதே

மழகான புட்பவனைகொடுன்
வடிவேணி றுத்திவழிபடு
மதுதிதெ னச்சொல்பவர்களை மருவாதே
மருணசை லத்திலுளவொரு
முதுகோபு ரத்தினடியினி
லடியேனி டத்தின்மொழிதலை யருள்வாயே
குழகாகு றத்திமுலைபுணர்
முருகாம லைப்பெணுதவிய
குமராவெ னச்சொல்புலவரை யகலானே
கொதிநீர்பெ ருக்குகடலிடை
துயில்வானு ரத்தில்வளரொரு
குலமாத ளிக்குமிருவர்கண் மணவாளா
மழமால்வி டைக்கணநுதின
மிவர்வார்து தித்தபொழுதினின்
மறைநான்மு கத்திலுளபொருள் பகர்வோனே
வருவார்வி னைத்தபடிவர
மருள்சீர்பொ றுத்துவளமலி
மயிலாச லத்திலுறைதரு பெருமாளே. (ச)

தந்தத்தானன தனதான தனதான தன-தனதான

அஞ்சப்பேடையனைய தாகுநடைமாதரொடு
கொஞ்சிச் சீராடுவத னலறிவுமாறியுன
தன்பர்க்காகாதகொடி யோனெனநிலோரிகழ மெலியாதே

யம்பொற்பாராள்கிறவ லாரிமுதலோர்கதியை
நம்பித்தீவேள்வியினி லாருயிர்கொல்வார்பலரு
மஞ்சப்போராடுமறி வாளர்புகழோதுநல மறவாதே

வஞ்சத்தோர்வாழுமனை வாசல்களிலேகியடல்
வென்றித்தோள்வீமனெடு மால்விசையன்மாரனெனும்
வம்புக்காளானகவி வாணருடனேதினமு மிகலாதே

மஞ்சைப்போலேயிலகு தோகைமயின்மீதிலிரு
பங்கிற்றேவானையொடு வேடமகண்மேவவெதிர்
வந்துற்றோர்நாள்கனவிலோதியவிறேதமதை யருள்வாயே

கஞ்சப்பூமீதுவளர் நான்முகனைமோதியொரு
குன்றிற்கூடேகதறி வாடவிடுமேன்மைபெறு
கந்தப்பாவாள்வலிமை தோய்நவவீரர்பணி துணைவோனே

கங்குற்போலாகமுறு சூரன்முதலாமவுணர்
மங்கிப்பூலோகமொடி வானுலகும்வாழவொரு
கங்கைச்சேயாகிவரு ஞானமணியேயிறைவர் குருநாதா

நெஞ்சத்தாலேகருதி டாதபலவாறுவரும்
விந்தைக்காராதிருவெ ணீறணியுமேலவரை
நிந்திப்பார்காலனிக ரானகவுமாரரொடு திரிவோனே

நிம்பத்தார்சூடவுமு ளானிசைகுவாயளவில்
குன்றத்தானேமயில மாமலையிலேமிகவு
நின்றெற்போல்வார்பிழைபொலாநலமதாகவருள்பெருமாளே.

தனனதன தனனதன தனனதன தனனதன
தனதானதத்ததன தனதானதத்ததன-தனதானா.

அறிவையறி வநுபிரம நிலையெனுநன் முனிவரடி
பணியாதெ திர்த்திகலி யிகழாண வத்தினரு
மிடியினிடை மறுகிவரு மிரவலர்கள் விழைதலொரு
கடுகாமெ னப்பெறவு முதவாதொ ளிப்பவரு
மருதினமு மடமகளிர் கலவிநல மெனவுருகி
வழிபாடி யற்றுகரு நிகரான துட்டர்மகிழ்
வடையாதே
யபரிமித மதுரநய குணமருவு கவிதைபல
தமிழாலு ரைத்துமலை தொறுமேகும் விற்பனரும்
விதிதவறி யளவிலுயிர் பதறியழ வதுபுரியு
மவர்வேர றுக்குமெம னெனும்வீர முற்றவரு
மரியவள மருவுபொழில் குலவுபொதி யையிலுறையு
முனிவோன்ம லர்க்கழலை மறவாத பத்தர்களு
மெலியாதே
பிறிதிணையி னடனமர கதமயிலின் முதுகிலி ந
மடவார்த மக்கிடையி லயில்வேல்பி டித்தமரர்
முனிவர்முத லினர்பரவ வொருபவள மலையெதென
முகமாறும் வெற்புறழ்ப னிருதோளு மிக்கொழுகு
பிரசமது வளகமல மலரணைய நிணையடியு
முதலாமு றுப்புமுழு மையுநேர்வ ரக்கருத
லறியாயோ

பெரியதிரு மலைமுகடு இடிகிடென வுருள்பொழுதி
லுயிர்போயு டற்றசையை நரிநாயு ணச்செயினு
மருணைமுது கிரிவட வருக்கதனில் வருபொழுதி
லருள்வாழ்வ ளித்திடினு மடியேனி ழைத்தபல
பிழையுநல மெனவுலகு மொழியுமிவ ணுழலும்வினை
யணுகாதி னித்துயரி லமிழாதி ருக்கும்வகை
புரிவாயே
மறிமழு வினையபய வரதமுட னணிதருகை
யொருநாலு டைப்பரம சிவனுமெ திர்த்தமத
னிருளுடல நொடியிலெரி படமுனியு மழல்விழிகொள்
பெருமானு மைப்பெண்முலை புணர்தோளு டைப்புனிதர்
மதகரியி னுடுபுலியை வதைபுரியு மிறைவரத
வணிவார்கொ ழுந்தனது செயலான திற்சிறிது
பகர்வோனே
வகுளமணி தருபுலவன் முதலினர்சொல் கவிபுனையு
நெடிபோன டற்றநுவர் குலகால னொத்தமுகி
லலைகடலி னிடைநெளியு முரகவணை மிசைதுயிலும்
விழியான்வ ரைக்கவிகை கொளுமாயன் மிக்கபுகழ்
மழிபுமுர கரிகொடிய கனகனுடல் கிழியவென
வொருதூணிடத்தில் வரு திருமால்வி ருப்பமுறு
மருகோனே
குறிபகரும் வனசரர்த மிகணிலுறு சிறுமிதரு
தினைமாவி னிற்பிரிய மிகுகோம ளக்குமர

னடியவரை யிகழுமவர் குலமுழுது நசியவென
வருகோப மிக்குடைய முருகோனு ரைக்கரிய
குகைகடோறு நடநவிலு மிருசரண முளகடவுள்
குருநாவெனச்சிறகை யறைகேத னத்தனை னின்
பகிழ்வோனே

குறைவிலவள மலிபொழிலு ளிளையவர்கண் மகளிரொடு
விளையாடி டக்கரிய நிறவேடர் கைச்சிலையொ
டிரலையென வணுகவவர் மகளிர்நகும் வியன்மருவு
குளிர்சார லிற்றவசு புரிவார் பழக்கமது
கொடுகிளிகண் மறைபயிலு மயிலமலை தனிலிணையில்
குருவாய மக்கினிய சிவஞான வித்தைதரு
பெருமாளே. (சு)

தனனதானனதானனதானன—தனதான.

கரியபேய்நிக ராமதவேள்விடு கணையாலே
கவலைநோய்மலி வாய்படமாதர்முன் மறுகாதே
கிரிகடோறுநி ஞறெனநாளித முறுமாறோர்
கிளியெனுமிக வோதியவாய்மொழி பிழைதாரு
சரிகுலாவிய தோளுமையாளருள் புதல்வோனே
சகலதேவரு நாடுமயேசுரர் குருநாதா
வரியராவணை மாயவனார்திரு மருகோனே
மயிலமாமலை மேல்விளையாடிய பெருமானே. (எ)

தனனதனத்தனனதனத் - தனதான.

கவலைமிகப்பெருகுதலிற் றுதிசெயுநட் பழியுமெனுட
கனவிலுரைத்திடுவனபொய்த் தொழியாதே
களபமுலைச்சிறுமியர்சொற் சுவையைவிழிக்கயலிணையைக்
கருதியளப்பருமயலிற் றவியாதே
தவளநிறபபொடிபுடனக் கணிபவரைக்கறுவுதொழிற்
சமணர்முதற்பகர்சிலருட் களியாதே
தமநியவெற்பனையமயிற் பரிமுதுகிற்றிகழ் தருநற்
றருணமதைத்தெரியவருட் புரிவாயே
புவனகரத் தலமதனிற் சிசுவெனவுற்றிகன்மலிமுப்
புரதகனற்கொருபொருளைச் செப்பியவாபா
புழையுறுகைக்கரிமுகவற் கிளையகுகக்கடவுளெனப்
புகலுமவர்க்கினியவைமிக் கருள்வோனே
சிவசமயத்தினர்தழையக் கவுணியருட்சிறுவனெனத்
திகழுமுழுப்புலமையுடைக் குரவோனே
செறிபொழிலிற்பிடியையடற்களிறுதொழத்தரும்வளைத்
திருமயிலக்கிரிமுருகப் பெருமாளே. (அ)

தனதானதந்ததந்த - தனதான.

கொடிபோனுடங்குகின்ற விடையார்ப தம்பணிந்து
கொலையாதி யுந்துணிந்து புரிதீயோர்
கொடைநாடி நெஞ்சநொந்துபலவூர்தொறுந்திரிந்து
குறைதீர்வதின்றிவம்பி லுழலாதே

பிடிபோன்மு மூங்குசெஞ்சொன் மலிபாடல்கொண்டுவந்து
திருதாளி டம்புனைந்து மகிழ்மேலோ
ரிவனோர்தொ ழும்பனென்று தமியேனையுஞ் சொல்வென்றி
யிசைவாக விஞ்சையொன்று தருவாயே
படிவான வந்தகொண்டல் விழியிய வநதபெண்கள்
பழகார்வ மிஞ்சுதுங்க மணவாளா
பதினாறு டம்பனென்று சிலநூல்விளம்பநின்று
பலவாறி லங்கும்விந்தை யுடையானே
மடியாவ ரங்கொடுந்து முதுசூர்வ ணங்கவென்று
மயிலேறும் வென்றிநன்று முருகோனே
வளையோலி டுந்தடங்கண் மலிசார லங்குறிஞ்சி
மயிலாச லம்புரந்த பெருமாளே. (சஅ)

தனனதனதனனதன - தனதான.

சரதமொழி சிறிதுமொழி வரியபிழை யுறுகொடியர்
தமதுமனை களிலடிமை புகலாமோ
சதுமறையி னுவனுமறு வகைநெறியை யிகழுமவர்
சரபமென வுலகின்மிளிர் தரலாமோ
சுருதவிக சிதவினய சரசகுண மகவிரடி
தொழுதுருகும் வினையுமலி வுறலாமோ
துரியநிலை யெனுமவுன ரகசியம துணருமவர்
துணையடியி னுதிர்பொடியு மெனிதாமோ

பரதவிதி வழிகனக சபையினட மிடுமிறைவர்
பணியவொரு பொருள்விரிவை மொழிவோனே
பகவனரி யெனவடிவு கொடுகனக னுடல்கிழிவு
படமுனியும் வயவனது மருகோனே
வரதமுறு கையுமபய மெனமிளிர வொருகனவில்
வருகருணை மிகையுடைய குருநாதா
வனசரரு முனிவரருள் கொடுகொடுமை தவிரவளர்
மயிலமலை மிசைநிலவு பெருமாளே. (௩௦)

தன்னதானனத் தனதன - தனதானா.

சகுணதேசிகப் பணிபுரி பவரையேசிடத் துணிபவர்
தமதுவாசகப் படிசெல நினையாதே
தமநியாசலத் தினைநிகர் முலைமினார்களைப் பணிபவர்
தருவதானபொய்ப் பொருண்மயல் பெருகாதே
முகுளநாண்மலர்த் துணர்கொடு னடிகண்மீதருச் சனைசெயு
முனிவரோடுநித் தமுமுறு முயர்வாலே
முறைகெடாதமுத் தமிழ்மழை பொழியும்வாழ்வுபெற் றகல்புவி
முழுதுமோதிடத் தகுபுகழ் பெறுவேனோ
குகுகுகூவெனத் தொனிதரு பெரியசேவலுற் றிலகிய
குவடுநேர்புயத் தணிபல படையோனே
குமரிகோமளப் பகவதி கவுரிநாரணற் கிளையவள்
குழவியாயடற் றகுவரை யடும்வீரா

வருளமாலிகைப் புயமத னுடன்முனுள்வரப் பெறுமிரு
மகளிர்பூண்முலைச் சுவடுறு மணிமார்பா
வளமெலாமுமுற் றுயர்பல குவடுதோய்தரத் திகழ்திரு
மயிலமாமலைக் கழகிய பெருமாளே. (கக)

தனதத்ததானன — தனதானு.

பலபொய்ச்சொல்பேசிய முறைகெட்டவேசியர்
பகவிச்சைமேலிட மெலியாதே
பகைமுற்றுசாரணர் நிகரற்பர்கூறிய
பனுவற்குமேன்மைகள் பகராதே
புலகைப்பொய்தானெனு நிலைபெற்றஞானிக
ளுறவைக்கனவிலு மறவாதே
யொருபுத்தியாலுனை வழிபட்டபேருட
னுளிரச்செய்தாளவு நினைவாயோ
வலகற்றதானவ ருடல்விட்டுவானுற
வடும்வெற்றிவேலணி புயவீரா
வளமையாத்ததோண்மற மகளிச்சையானித
மவள்செப்பும்வேலைகள் புரிவோனே
வலைவைப்பெணொடு நடமிட்டவாரண
மகிழக்குலாவிய துணைவோனே
வருபத்தர்நாடிய படிபெற்றுவாழ்வுறு
மயிலத்தின்மேவிய பெருமாளே. (கஉ)

முற்றிற்று.

நூற்பயன் - வெண்பா

வெயிலைத் தருங்கதிர் வேல் வித்தகவேண் மேவு
மயிலைத் திருப்புகழை வாழ்த்திற்—குயிலனையார்
சூழவருங் காமன்முதற் சொல்பகையெல் லாந்தடிந்து
வாழவல்ல போதம் வரும்.

வேலுமயிலுந்துணை.

---

பதிகம்.

காப்பு-வெண்பா.

மயிலா சலக்குமரா வள்ளிமண வாளா
கயிலாயத் தாருதவுங் கந்தா—வயிலாருங்
கையாநீ வந்து கழறியவை யத்தனையும்
பொய்யாக லாமோ புகல்.

அறுசீர்விருத்தங்கள்.

செந்தமிழ்ப்பாமாலையினுக் காசைகொண்டு புனைவது போற் சிறந்த பேற்றைத், தந்தருளவேண்டாமோ விதுவுனக்குத் தெரியாதோ சாற்றுவானேன், வெந்தவெண்ணீறணிவார் தம் மழல்விழியிற்பொறியாகி மேனாள்வந்தாய், கொந்தலருமகடம் பணிந்த கொற்றவாமயிலமலைக் குமரவேளே. (க)

இனிச்சகிக்கமுடியாத துயர முறக்கண்டுமன மிரங்கிடாமற், பனித்தமொழிப்பேதையருக் குருகவிடன்முறைதானோ

பணியென்செய்வேன், ரொணித்தசிறு சதங்கையுந்தண்டையுங்கழலுங்குலவுமிரு துணைத்தாளானே, குனித்தவரிச்சிலைவேடர் மகள்கணவா மயிலமலைக் குமரவேளே. (உ)

செக்கிலிடுமெள்ளேபோற் பெரிதுவருந்திடுவேன்முற்சிகியிற்றேன்றி, யிக்கினற்கும்விரிஞ்சனுக்கு மியமனுக்குமஞ்சாம லிருக்கச்செய்வாய், வக்கிரவெண்கோட்டுமத களிற்றினுக்குப்பின்றேன்று மதலாய்வெள்ளைக், கொக்கிறகுபூண்டபிரான் றவப்பயனே மயிலமலைக் குமரவேளே. (ங)

நெஞ்சறியப்பிழைகோடி புரிந்திருக்குந் தமியேனுண்ணீவந்தந்தா, ளஞ்சலளித்தனையதுகண் டிறுமாந்தேனூர்தோறு மலைக்கவேண்டாம், வஞ்சரறிவரியானே வாரணப்புட்கொடியேந்தி வயங்குங்கையாய், குஞ்சரியாள்களிகூருங் கோமானேமயிலமலைக் குமரவேளே. (ச)

நற்றவஞ்செய்வார்வியக்குந் திருவேடமிகக்காட்டி ஞானமில்லாச், சிற்றறிஞர் தாமுமிகழ் தீமைமிகப்புரிவேனைச் சினந்து தள்ளேல், பற்றறுத்தபெரியோருக் கெளியோனே பன்னிருகைப் பவளக்குன்றே, குற்றமெலாம்பொறுத்தருளுங் குணக்கடலேமயிலமலைக் குமரவேளே. (ரு)

பாமரருட்சிறந்தொளிருந் தமியேனுஞ்சிறிதேனும் பழுதில்லாதார், தாமடையும்பெரும்பேற்றுக் கிச்சைகொள்ளச் செய்தனையே தருவாய்கொல்லோ, பூமணமுக்குட்டியகைப் புலவோனேயெவ்வுலகும் புகழ்பெம்மானே, கோமளசுந்தரமடவார்க் கினியோனேமயிலமலைக் குமரவேளே. (சு)

உ

சிவமயம்.

# கல்வளையந்தாதியின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி



செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---

உ

கணபதி துணை.

# திருச்செந்தினிரோட்டகயமகவந்தாதி.

துறைமங்கலம்

## சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்தது.

இது

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

செய்த உரையுடன்

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத் தருமபரிபாலகர்

## விசுவநாதபிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிறபதிப்பிக்கப்பட்டது.

௧௦-ம் பதிப்பு.

இரத்தாக்ஷி௵ வைகாசிமீ.



1924

கணபதி துணை.

# திருச்செந்திரோட்டகயமகவந்தாதி

## மூலமும் உரையும்



### காப்பு.

கொற்றவருணனை நின்றன் றுழக்கியகொக்குருவைச்
செற்றவருணனையன்னசெவ்வேற்படைச்செந்திலர்க்கு
முற்றவருணனையந்தாதியென்று முதிர்மதப்பேர்
பெற்றவருணனையானனத்தாதியைப்பேசுவனே.

இதன் பதப்பொருள். அன்று கொற்ற வருணனை நின்று உழக்கிய கொக்குருவைச் செற்ற - (யுத்தஞ்செய்த) அக்காலத்து வெற்றியையுடைய சமுத்திரராசனைக் (கடலிடத்தே) நின்று கலக்கிய மாமரவடிவாகிய சூரபத்மனைக் கொன்ற—அருணனை அன்ன செவ்வேற்படைச் செந்திலர்க்கு - சூரியனைப்போன்ற சிவந்த வேலாயுதத்தையுடைய திருச்செந்தூரில் வாழும் முருகக்கடவுளுக்கு—வருணனை அந்தாதி முற்ற - (நான் பாடத்தொடங்கும்) வர்ணனையையுடைய இத்திரோட்டகயமகவந்தாதியானது (இடையூறின்றி) முடியும்பொருட்டு,—என்றும் முதிர் மதப்பேர் பெற்ற அருள் நனை - எக்காலத்தும் முதிர்ந்த மதநீரென்று (உலகத்தார் சொல்லும்) பெயரைப் படைத்த அருள் வெள்ளமானது தோன்றி நனைக்கப்பெற்ற—ஆனனத்து ஆதியைப் பேசுவன் - யானைமுகத்தையுடைய கணபதியை (யான்) துதிப்பேன். என்றவாறு. ஏ - ஈற்றசை. அந்தாதியானது முடியும்பொருட்டுக் கணபதியைத் துதிப்பேனெனக் கூட்டுக. திரோட்டகயமகவந்தாதி - திரோட்டகமும் யமகமுமாகப் பாடப்படும் அந்தாதி. திரோட்டகமாவது இதழ் முயற்சியாற்பிறக்கும் மெய்யும் உயிரும் உயிர்மெய்யும் வாராமற் பாடப்படுவது. யமகமாவது அடிமுதலெழுத்தோடு இரண்டெழுத்துமுதற் பத்தெ

மூத்திருக ஓரடிபோல நான்கடியும் பாடப்படுவது. இப்பிரபந்தத்தின் முதலிலே தனித்து நிற்கும் இக்காப்புச்செய்யுள் திரோட்டகமுமன்று, யமகமுமன்று, திருக்கெனக் கண்டுகொள்க. திருக்காவது அடிமுதலெழுத்தொழித்து இரண்டெழுத்து முதற பன்னிரண்டெழுத்திருக்க ஓரடிபோல நான்கடியும் பாடப்படுவது.

யானைக்கண்டங்கரிசென்றேத்தெழிற்செந்திலின்றடைந்தே
யானைக்கண்டங்கரியற்கங்கயிலையையேத்ததகை
யானைக்கண்டங்கரிசேரெண்டிக்காக்கினற்கீநலிசை
யானைக்கண்டங்கரிதாகியசீர்க்கதியெய்தினனே.

இ - ள். யானைக்கண் தங்கு அரி சென்று ஏத்து எழிற் செந்தில் இன்று அடைந்து - வெள்ளையானையின்மேல் இருக்கின்ற இந்திரன் போய்த் துதிக்கும் அழகினையுடைய திருச்செந்தூரை இன்றைக்குச் சேர்ந்து,—யான் - நான்—ஐக்கண்டம் கரியற்கு - அழகையுடைய கழுத்து கரிதாகப்பெற்றவரும்—அம் கயிலையை ஏத்த தகை ஆன் ஐக்கு - அழகிய கைலாசகிரியைப்போன்ற பெருமையையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட கடவுளும—அண்டம் கரி சேர் எண்டிக்கு ஆக்கினற்கு - அண்டங்களையும் அட்ட கஜங்கள் பொருந்திய அட்டதிக்குக்களையும் சிருட்டித்தவருமாகிய பரமசிவனுக்கு—ஈ நல் இசையானைக் கண்டு - (பிரணவப்பொருளை) உபதேசித்தருளிய நன்மையாகிய கீர்த்தியையுடைய சுப்பிரமணிய சுவாமியைத் தரிசித்து,—அங்கு அரிதாகிய சீர்க்கதி எய்தினன் - அவ்விடத்தே (யாவர்க்குங் கிடைத்தற்கு) அரிதாகிய சிறப்பையுடைய மோக்ஷத்தை யடைந்தேன். எ - று. நான் சுப்பிரமணியசுவாமியைத் தரிசித்து மோக்ஷத்தை யடைந்தேனெனக் கூட்டுக. (க)

தினகரனந்தநனியிலங்காநின்றசெய்யநற்செந்
தினகரனந்தநிதியாயினனடற்சீரயிலேந்

தினகரனந்தகனைச்செற்றதாளர்திகழ்கனகா
தினகரனந்தநடனர்தனயனென்சிந்தையனே.

இ-ள். தினகரன் நந்த நனி இலங்காநின்ற செய்ய நற்செந்தில் நகரன் - சூரியன் ஒளி குன்றும்படி மிகப்பிரகாசிக்கின்ற செவ்வையாகிய நல்ல திருச்செந்திலென்னும் நகரத்தையுடையவரும்—நந்தம் நிதியாயினன் - நம்முடைய செல்வமாயினவரும்—அடறசீர் அயில் ஏந்தின கரன் - வலிமையையுடைய சிறப்பாகிய வேலாயுதத்தைத் தரித்த கையையுடையவரும்,—அந்தகனைச் செற்ற தாளர் திகழ் கன காதில் நகர் அனந்தன் நடனர் தனயன் - இயமனை வதைத்த பாதங்களையுடையவராகியும் விளங்குகின்ற பாரத்தையுடைய செவிகளிலே அசைகின்ற அனந்தனாகிய குண்டலத்தையுடைய நடேசராகியு மிருக்கின்ற பரமசிவனுடைய குமாரருமாகிய முருகக்கடவுளானவர்—என் சிந்தையன் - என மனத்தின்கண் இருக்கின்றனர். எ-று. (உ)

சிந்தனையாகத்திசையந்தணர்க்கிறைசேரகங்க
சிந்தனையாகத்தரையளித்தாடரைசென்றிரந்த
சிந்தனையாகத்திடையியைந்தான்றந்தசேயளியாற்
சிந்தனையாகத்தநற்செந்திலாய்நினைச்சேர்ந்தனனே.

இ-ள். சிந்தனை யாகத்து இசை அந்தணர்க்கு இறை - தங்கள் மனமானது வேள்வியின்கண்ணே பொருந்தப்பெற்ற பிராமணர்கட்குத் தலைவரே,—சேர் அகம கசிந்து அனை ஆகத் தரை அளித்தாள் - பொருந்திய மனங்கசிந்து மாதாவாக இப்பூமியைப்பெற்ற உமாதேவியையும்—சென்று தரை இரந்த சிந்தனை- (மாவலிச்சக்கிரவர்த்தியினிடத்திலே) போய்ப் பூமியை யாசித்த வாமனரூபத்தையுடைய விஷ்ணுமூர்த்தியையும்—ஆகத்திடை இயைந்தான் தந்த சேய் - தமது திருமேனியிலே (இடப்பாதியும் வலப்பாதியுமாகக்) கொண்ட பரமசிவன் பெற்ற குமாரரே,—அளியால் சிந்து அனையா - கிருபையினாலே சமுத்திரத்தைப் போன்றவரே,—கத்த - கருத்தாவே,—நற்செந்திலாய் -

நன்மையாகிய திருச்செந்தூரையுடையவரே,—நினைச் சேர்ந்தனன் - உம்மை (யான் வந்து) அடைந்தேன். எ - று. என்னைக் காத்துக்கொள்ளுமென்பது எஞ்சி நின்றது. அன்னை நினைன என்பன அனை நினை என இடைக்குறைந்து நின்றன. (௩)

தனத்தலங்காரநிறைநாரியரந்தரத்தசைகே
தனத்தலங்காரநிகழரங்காடச்செய்தன்னியத
தனத்தலங்காரதராயியங்கத்தக்கதண்செந்திற்கந
தனத்தலங்காரனையானயனேத்திடத்தங்கினனே.

இ - ள். தனத்து அலங்கு ஆரம் நிறை நாரியர் - முலையினிடத்து அசைகின்ற முத்துமாலைகள் நிறையப்பெற்ற பெண்கள் — அந்தரத்து அசை கேதனத்து அலங்காரம் நிகழ் அரங்கு ஆட— ஆகாயத்திலே அசைகின்ற கொடிகளையுடைய அழகு விளங்குகின்ற சபையின்கண்ணே நடிக்கவும்,—செய் தன்னிய நத்து அலம் கார் அதராய இயங்கத் தக்க தண் செந்தில் கந்தன-வயல்களிலே சுகத்தையுடையனவாகிய சங்குகள் கலப்பைச்சாலிலே நிற்கின்ற சலமானது வழியாக அதிலூர்ந்து செல்லவுந் தக்க குளிர்ச்சியையுடைய திருச்செந்தூரில் வாழும் கந்தசுவாமியானவர்—அத்தலம் கார் அனையான் அயன் ஏத்திடத் தங்கினன் - அந்தஸ்தலத்தினிடத்தே மேகம்போலும் விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் துதிக்க இருந்தருளினார். எ - று. அலட ஆகுபெயர். (௪)

தங்கந்தனங்களடையத்தனியெனைத்தள்ளியங்கே
தங்கந்தனங்கடரச்சென்றனரதிந்தாரிலைகா
தங்கந்தனங்களலர்காக்கஞெரெழிற்றண்செந்திலார
தங்கந்தனங்கநிகர்செக்கர்செய்சஞ்சலத்தினையே.

இ - ள். தனங்கள் தங்கம் அடையத் தனி எனைத் தள்ளி - என் முலைகள் பொன்போலும் தேமலைப்பொருந்தத் தனியாக என்னை இவ்விடத்திலே விட்டுப் பிரிந்து—அங்கே தங்கு அ

தனங்கள் தரச் சென்றனர் - (தாம் போன) அவ்விடத்தில் இருக்கின்ற அழகிய திரவியங்களைக் கொண்டுவரும்பொருட்டுப் போன என்னுடைய நாயகர்—காதம் கந்தம் நம் கள் அலர் காக்கண் ஆர் எழில் தண் செந்திலார் தம் கந்தன் - ஓர்காததூரம் மணம் வீசுகின்ற நம்முடைய தேன்பொருந்திய பூக்கள் நந்தனவனங்களிலே நிறைந்திருக்கப் பெற்ற அழகையும் குளிர்ச்சியையுமுடைய திருச்செந்தூரில் வசிக்கின்றவர்களுடைய கந்தசுவாமியினது—அங்கம் நிகர் செக்கர் செய் சஞ்சலத்தினை அறிந்தாரிலை - திருமேனியைப்போலும் இச்செவ்வானம் எனக்குச் செய்கின்ற துக்கத்தை உணர்ந்தாரில்லை. எ - று. [தலைவன் பிரிந்துழித் தலைவி மாலைகண்டிரங்கல்.] (௫)

சலந்தரநாகந்தரித்தார்தந்தாதன்றனதிடைச்சஞ்
சலந்தரநாகந்தரைநடந்தாலெனச்சார்ந்ததண்டன்
சலந்தரனாகந்தளரச்செறறூர்தனயன்றலநச்
சலந்தரநாகந்தனக்கிறைசேர்செந்திறசார்ந்திடற்கே.

இ - ள். சலம் தரம் நாகம் தரித்தார் - கங்கையையுந் தலைமாலையையும் சர்ப்பத்தையும் தரித்தவரும்,—தம் தாதன்றனதிடைச் சஞ்சலம் தர - தம்முடைய அடியாராகிய மார்க்கண்டேயரிடத்திலே துக்கத்தைக் கொடுக்கும்பொருட்டு—நாகம் தரை நடந்தாலெனச் சார்ந்த தண்டன் - யானையானது பூமியிலே நடந்தாற்போலச் சேர்ந்த இயமனையும்—சலந்தரன் ஆகம் தளரச் செற்றூர் தனயன் - சலந்தரனையும் உடலஞ்சோரும்படி கொன்றவருமாகிய பரமசிவனுடைய குமாரராகியும்—தரம் நாகந் தனக்கு இறை சேர் செந்தில் தலம சார்ந்திடற்கு நச்சலம் - மேன்மையையுடைய மலைகளுக்குத் தலைவராகிய மிருக்கின்ற முருகக்கடவுள் வீற்றிருக்கும் திருச்செந்தூராகிய தலத்தை யடைதற்கு யாம் விரும்பினோமில்லை. எ - று. (௬)

சாரங்கஞ்சங்கரிகட்கிச்சித்தேய்ந்தகைச்சங்கரனூர்
சாரங்கஞ்சங்கரிதாஞ்சக்கரங்கையிற்றுங்கினன்சேய்

சாரங்கஞ்சங்கரியாநண்ணினர்க்கந்தத்தந்திரத்தா
சாரங்கஞ்சங்கரிதேயெனச்செய்நின்சரண்டந்ததே.

இ-ள். சாரங்கம் சங்கரி கட்கு இச்சித்து ஏய்ந்த கைச் சங்கரனார் - மானுனது உமாதேவியினது கண்ணினதழகுக்கு விரும்பிவந்திருந்தாற்போலப் பொருந்திய கையையுடைய சங்கரரும்—சாரங்கம் சங்கு அரிதாம் சக்கரம் கையில் தாங்கினன் சேய் சார் அங்கம் சங்கரியா நண்ணினர்க்கு - சார்ங்க மென்னும் வில்லையும் சங்கையும் அரிதாகிய சக்கரத்தையும் கையிலே தரித்த விஷ்ணுமூர்த்தியுடைய புதல்வனாகிய மன்மதனுடைய பொருந்திய உடலத்தைக் கொன்று (முன்போல யோகத்து) இருந்தவருமாகிய பரமசிவனுக்கு—அந்த தந்திரத்து ஆசாரம் - வேதத்தின் முடிவாகிய சைவாகமத்தினது சீலத்தை—கஞ்சம் கரிதேயெனச் செய் நின் சரண் தந்தது - செந்தாமரை மலரும் கரிதென்று சொல்லும்படி செய்கின்ற உம்முடைய பாதம் கொடுத்தது. எ - று. இரண்டாமடியிலே சார்ங்கமென்பது எதுகை நோக்கிச் சாரங்கமென ஓர் அகரம் விரியப்பெற்று நின்றது. (எ)

தந்தனஞ்சங்கையணிகரர்சேர்க்கத்தடங்கண்ணலை
தந்தனஞ்சங்கையலரென்செய்யாடங்கச்சற்சனர்நித்
தந்தனஞ்சங்கையகலறத்திசெந்திறசார்கதனித்
தந்தனஞ்சங்கையநகனிளையனற்றுடரற்கே.

இ-ள். சங்கை அணி கரர் தம் தனம் சேர்க்கத் தடங்கண் அலை தந்தனம் - சங்குவளையலையணிந்த கையினையுடைய பெண்கள் தங்கள் முலைகளிலே புணர்க்க அவர்களுடைய விசாலமாகிய கண்களினாலே யாம் அலைந்தோம்:—சம் கை - (இனி அவர்களோடனுபவிக்குஞ்) சுகத்தை நீ வெறுத்துவிடு;—அலர் என் - (இதனாலுண்டாகும், பழிமொழி நமக்கு ஏன்?—செய்யாள் தங்கச் சற்சனர் நித்தம் தனம் சங்கை அகல் அறத்து ஈ - இலக்குமி வசிக்கச் சன்மார்க்கமுடைய சனங்களுக்கு எப்பொழுதும் திரவியங்களை ஐயம் நீங்கிய தருமநெறியிலே கொடு:—தனித்தந்

தன் அஞ்சு அங்கை அநகன் இளையன் நல் தாள் தரற்குச் செந்தில் சார்க - ஒற்றைக்கொம்பினையுடையவரும் ஐந்தாகிய அழகிய கையையுடைய பாவமில்லாதவருமாகிய விநாயகக்கடவுளுடைய தம்பியாராகிய சுப்பிரமணியசுவாமியானவர் தம்முடைய நன்மையாகிய பாதங்களை நமக்குத தரும்பொருட்டு அவர் வீற்றிருக்குந் திருச்செந்தூரை அடை. எ - று. (அ)

தரங்கநந்தாரனனியேற்றெழிற்செந்திற்றந்தைநிரந்
தரங்கனந்தாரகநாடினென்றேநினைசத்தியரந்
தரங்கநந்தாவநகரீசர்சேய்கிரித்தையலர்க்கந்
தரங்கனந்தாரளகஞ்சிற்றிடைசலசங்கண்களே.

இ - ள். தரங்கம் நந்து ஆரல் நனி ஏற்று எழில் செந்தில் தந்தை - கடற்றிரைகள் சங்குகளை மதிலின்மேலே மிக ஏற்றுகின்ற அழகையுடைய திருச்செந்தூரில் வீற்றிருக்கும் பிதாவாகியும்,—நிரந்தரம் தாரகம் நாடின் கனம் என்று நினை சத்தியர் அந்தரங்கம் நந்தா - எக்காலத்தும் பிரமஸ்வரூபத்தை விசாரிக்கில் நமக்கு மேன்மையாகுமென்று நினைக்கின்ற மெய்ஞ்ஞானிகளுடைய அந்தரங்கத்திலே கெடுதலின்றி விளங்குகின்றவரும்,—அநகர் ஈசர் - ஆணவமில்லாதவருமாகிய பரமசிவனுடைய—சேய கிரித் தையலர்க்கு-குமாரராகியுமிருக்கின்ற முருகக்கடவுளுடைய மலையிலிருக்கும் பெண்ணுக்கு - தார் அளகம் கனம் - மாலையையுடைய அளகமானது மேகத்தைப்போலும்;—சிற்றிடை அந்தரம் - சிறுமையாகிய இடையானது ஆகாயத்தைப்போலும்:—கண்கள் சலசம் - கண்களானவை செந்தாமரைமலரைப்போலும். எ - று. [தலைவியினதவயவம் புகழ்தல்.]

சங்கங்களங்கமுனிக்கரைசேர்செந்திற்றங்கினநஞ்
சங்கங்களங்கரநண்ணரன்சேயெய்தச்சார்ந்தனஞ்சற்
சங்கங்களங்கனியைநிகர்தண்டதாற்கினிய
சங்கங்களங்கரெனநின்றயாங்கணெஞ்சங்கரைந்தே.

இ - ள். சங்கங்கள் அம் கழனிக்கரை சேர் செந்தில் தங்கினம - சங்குகள் அழகையுடைய வயல்களினது கரைகளிலே பொருந்திய திருச்செந்தூரின்கண் இருந்தனம்;—நஞ்சம் ஆகம் களம் கரம் நண் அரன் சேய் எய்த - நஞ்சும் தலையும் கழுத்திலும் கையிலும் இருக்கப்பெற்ற பரமசிவனுடைய குமாரராகிய முருகக்கடவுளை அடையும்பொருட்டு,—சரசங்கம் சார்ந்தனம் - சரசங்கத்தைச்சேர்ந்தோம்:—களங்கனியைநிகர் தண்டதரற்கு இனி அசங்கம் - களாப்பழத்தைப்போலும நிறத்தையுடைய இயமனுக்கு இனி அஞ்சோம்;—களங்கரென நின்ற யாங்கள் நெஞ்சம் கரைந்து - குற்றத்தையுடையவர்களாய் நின்ற நாங்கள் மனம் உருகி. எ - று. நாங்கள் மனமுருகி இருந்தனமெனக் கூட்டுக. (௯௦)

கரத்தரிக்கங்கணங்கட்டரனூர்தந்தகந்தரழ
கரத்தரிக்கங்கணங்கண்டசெய்ச்செந்திலெங்காங்கேயாசா
கரத்தரிக்கங்கணங்கட்கயனூர்க்கெழிற்காசணிசே
கரத்தரிக்கங்கணங்கற்றிடத்தாங்கினானைச்சத்தியே

இ - ள். கரத்து அரிக கங்கணம் கட்டு அரனூர் தந்த கந்தா - கையிலே சாபமாகிய கடகத்தைக் கட்டிய பரமசிவனை பெற்ற கந்தசுவாமியும,—அழகர் - அழகையுடையவரும்,—அந்தர் - பிதாவும்,—இக்கு அங்கணம் கண்ட செய்ச் செந்தில் எங் காங்கெயர் - கரும்புகள் சேற்றினிடத்து உண்டாகப்பெற்ற வயல்களையுடைய திருச்செந்தூரில் வீற்றிருக்கின்ற நம்முடைய காங்கேயருமாகிய முருகக்கடவுளானவர்—சாகரத்து அரிக்கு - திருப்பாற்கடலிலே நித்திரைசெய்கின்ற விஷ்ணுமூர்த்திக்கும,—அம் கணங்கட்கு - அழகிய (தேவாமுதலிய) கணங்களுக்கும,—அயனூர்க்கு - பிரமதேவருக்கும்,—எழிற் காசு அணி சேகரத்து அரிக்கு-அழகையுடைய இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட முடியையுடைய இந்திரனுக்கும்,—அங்கு அணங்கு அற்றிட - அவ்விடத்தே (சூரன் முதலிய அசுரர்களாலுண்டாகிய) வருத

தம் நீங்கும்பொருட்டு—கைச்சத்தி தாங்கினர்-கையின்கண்ணே வேலாயுதத்தைத் தரித்தருளினுர். எ-று. காங்கேயரென்பது காங்கெயரெனக் குறுககல்விகாரம்பெற்று நின்றது. (௧௧)

சத்திக்கரத்தனகச்சேயங்கத்தினைத்தந்தனனற்
சத்திக்கரத்தனகச்சிலையாளிதன்றாளிணைநே
சத்திக்கரத்தனகத்தியைந்தேத்தரன்றந்தகதிர்ச்
சத்திக்கரத்தனகசெந்திலாய்நின்சரண்சரணே.

இ-ள். சத்திக் கரத்தன் அகச் சேய அங்கத்தினைத் தந்தனன் - வலிமையையுடைய முதலையினது வயிற்றினுள்ளே புகுந்த பிராமணப்பிள்ளையினுடைய உடம்பை (சுந்தரமூர்த்திநாயனாருடைய திருப்பதிகத்தின் பொருட்டு) அழைத்துக்கொடுத்தவரும்— நல் சத்திக்கு அரத்தன - நன்மையாகிய (தமதிடப்பாதியிலிருக்கும்) உமாதேவிக்கு (வலப்பாதியிலே) சிவந்த ரூபமாக விளங்குகின்றவரும,—நகச் சிலை ஆளி - மகாமேருமலையை வில்லாக ஆண்டவரும,—தன் தாளிணை - தம்முடைய இரண்டு பாதங்களையும்—நேசத்து இக்கர் அத்தன அகத்து இயைந்து ஏத்து அரன் தந்த - அன்பினைக் கருப்புவில்லையுடைய மன்மதனுக்குப் பிதாவாகிய விஷ்ணுமூர்த்தி மனசிலே பொருந்தித் துதிக்கின்ற சங்காரகர்த்தாவுமாகிய பரமசிவன் பெற்ற—கதிர்ச் சத்திக் கரத்து அனக - கிரணத்தையுடைய வேலாயுதத்தைத் தரித்த கையினையுடைய மலமுத்தரே,—செந்திலாய் - திருச்செந்தூரையுடையவரே,—நின் சரணே சரண - உம்முடைய பாதங்களே எனக்குப் புகலிடம். எ-று. (௧௨)

சரிதங்கையாரக்கலனந்தனந்தரித்தார்நரகே
சரிதங்கையாரக்கரிடத்தினர்தந்ததனைசெந்தினே
சரிதங்கையாரககணத்தினனல்கைத்தல்சரதந்தஞ்சீரச
சரிதங்கையாரக்கசிந்திசைக்கின்றதகையினர்க்கே.

இ-ள். சரி தம் கை ஆரக் கலன் தம் தனம் தரித்தார் நரகேசரி தங்கையார் இடத்தினுர் - வளையலைத் தமது கையிலும்

முத்துமாலையாகிய ஆபரணத்தைத் தமது மூலையிலும் தரித்தவரும் நரசிங்கவுருவங்கொண்ட விஷ்ணுமூர்த்தியினுடைய தமையையாருமாகிய உமாதேவியார் பொருந்திய வாமபாகத்தையுடையவராகிய—அக்கர் தந்த - சங்குமணியை அணிந்த பரமசிவன் பெற்ற—தண் செந்தில் நேசர் - குளிர்ச்சியையுடைய திருச்செந்தூரில் விருப்பத்தையுடைய முருகக்கடவுள்—இதம் கையார் - இன்பத்தை வெறுத்து செய்வார்;—அக்கணத்து இன்னல் கைத்தல் சரதம் - அந்தக்கணத்திலே துன்பத்தை வெறுத்தொழித்தல் சத்தியம்;—தம் சீர்ச் சரிதம் கை ஆரக் கசிந்து இசைக்கின்ற தகையினர்க்கு - தமது சிறப்பையுடைய சரித்திரத்தை ஒழுக்கம் பொருந்தும்படி மனங்கசிந்து சொல்கின்ற அன்பினையுடையவர்களுக்கு. எ - று. முருகக்கடவுள் அன்பினையுடையவர்களுக்கு இன்பத்தைச் செய்வார், துன்பத்தையொழித்தல் சத்தியமெனக் கூட்டுக. (௯௬)

இன்னந்தியங்கிகர்த்தசெங்கேழனைகயிரண்டா
யின்னந்தியங்கிரியைச்சிலையாகத்தனசேயெழிற்செய
யின்னந்தியங்கியிருங்கஞ்சஞ்சேர்செந்திலெந்தைதனை
யின்னந்தியங்கிசையக்கதியீந்தனனென்றனக்கே.

இ - ள். இன் அந்தி அங்கி நிகர்த்த செங்கேழன் - இனிதாகிய செவ்வானத்தையும் அக்கினியையும் போன்ற செந்நிறத்தையுடையவராகியும்,—கை ஈரிரண்டு ஆய் இல் நந்தி அங்கிரியைச் சிலையாக்கி தன் சேய - நான்கு கைகளையுடைய மாதாவையில்லாத நந்தியென்னும் திருநாமத்தையுடையவரும் அழகையுடைய மகாமேருமலையை வில்லாகக்கொண்டவருமாகிய பரமசிவனுடைய குமாரராகியும—எழில் செய்யில் நந்து இயங்கி இரும் கஞ்சம் சேர் செந்தில் எந்தை - அழகைப்பொருந்திய வயல்களிலே சங்குகள் ஊர்ந்து சென்று பெருமையாகிய தாமரைகளிலே பொருந்தியிருக்கப்பெற்ற திருச்செந்தூரில் வீற்றிருக்கும் நமது பிதாவாகியுமிருக்கின்ற முருகக்கடவுளானவர்,—

தளையின நந்தி அநங்கு இசைய - பாசத்தினூற் கெட்டுலைந்து அந்தஸ்தலத்தினைக் கண்ணே சேர,—என்றனக்குக் கதி ஈந்தனன் - எனக்கு மோக்ஷத்தைத் தந்தருளினார். எ - று. (கச)

தனக்கடங்காரெயில்செற்றகங்காளன்றனயனங்கந்
தனக்கடங்காதிழிதந்திக்கிளையன்றளிரெழிற்சந்
தனக்கடங்காநிறைசெந்திலினற்சேய்சயிலநங்கை
தனக்கடங்காணினச்சாரிலையண்ணறரணியிலே.

இ - ள். தனக்கு அடங்கார் எயில் செற்ற கங்காளன் தனயன் - தமக்கு அமையாத அசுரர்களையுடைய மும்மதில்களையும் அழித்த முழுவெலும்பை யணிந்த பரமசிவனுடைய குமாரரும,—அம கந்தன் - அழகைப்பொருந்திய கந்தசுவாமியும்—அங்கடம் காது இழி தந்திக்கு இளையன் - அந்த மதமானது காதினின்றும் சொரிகின்ற யானையாகிய விநாயகக்கடவுளுக்குத் தம்பியும்,—தளிர் எழிற சந்தனக் கடம் கா நிறை செந்திலில் நற் சேய் - தளிர்களைப்பொருந்திய அழகையுடைய சந்தனமரங்களின் காடுகளும் பூஞ்சோலைகளும நிறையப்பெற்ற திருச்செந்தூரில் வீற்றிருக்கும் நல்ல இளையோருமாகிய சுப்பிரமணிய சுவாமியினது—சயில நங்கை தனக்கடம் காணின் - மலையிலிருக்கின்ற பெண்ணினுடைய தனமாகிய குடங்களைக் காண்பாராயின்,—அண்ணல் தரணியில் நச்சார் இலை - தலைவனே, இப்பூமியின்கண்ணே விரும்பாதாரில்லை. எ - று. [பாங்கன் தலைவியின் அவயவத்தழகை வியத்தல்.] (கரு)

தரணியனையநிறத்தண்ணலாரிரந்தன்றளந்
தரணியனையனிறைஞ்சயிலார்நற்றனிச்சிலையாந்
தரணியனையனகனையந்தரிதந்திடுகந்
தரணியனையனென்சேயலர்த்தாள்கடரித்திறைஞ்சே.

இ - ள். தரணி அனைய நிறத்து அண்ணலார் - சூரியனைப் போன்ற நிறத்தையுடைய பெருமையிற் சிறந்தவராகியும்,— அன்று இரந்து அளந்த தரணியன் அயன் இறைஞ்சு அயிலார் -

அக்காலத்து யாசித்து அளக்கப்பட்ட பூமியையுடைய விஷ்ணு மூர்த்தியும் பிரமதேவரும் வணங்குகின்ற வேலாயுதத்தை யுடையவராகியும்,—நல் தனிச் சிலையாம் தரணியன ஐ அனகன் ஆர் அந்தரி தந்தி கந்தர் - நல்ல ஒப்பில்லாத வில்லாகிய மலையை யுடையவரும் அழகினையுடைய மலரகிதருமாகிய பரமசிவனைச் சேர்ந்த உமாதேவி பெற்றருளிய கந்தசுவாமியாகியுமிருக்கின்ற முருகக்கடவுளே - அணி அல் - (நமக்குப்)பெருமை பொருந்திய அரணாயிருக்கின்றார்;—நெஞ்சே மையல் - மனமே; நீ வருந்தாதே;—அலர்த் தாள்கள் தரித்து இறைஞ்சு—அவருடைய செந்தாமரைமலர்போலும் திருவடிகளைத் தாங்கி வணங்கு. எ-று. அல்லென்பது மதிலுக்குப் பெயராமாறு "இரவுமிருளு மிரும்பின் பெயரு—மெயிலுமிரவியுமல்லென லாகும்" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலுணர்க. (கசு)

தரிக்கனந்தங்கலைநீள்சடைக்கைக்கனற்சங்கரனந்
தரிக்கனந்தங்கலைநீதிகள்சாற்றரன்றந்தநற்கந்
தரிக்கனந்தங்கலைநீர்ச்செய்க்கணுஞ்செந்திலார்தளையா
தரிக்கனந்தங்கலைநீத்திழந்தேங்கரச்சங்கங்களே.

இ - ள். தரிக்க நந்து அம் கலை நீள் சடை கைக்கனல் சங்கரன் - தன்னைச் சூடிக்கொண்ட மாத்திரத்தில் ஆக்கம்பெற்ற அழகிய சந்திரகலையையுடைய நீண்ட சடையையும் கையிலே பொருந்திய அக்கினியையுமுடைய சங்கரரும்—அந்தரிக்கு அனந்தம் கலை நீதிகள் சாற்று அரன் - உமாதேவிக்கு முடிவில்லாத சாத்திரமார்க்கங்களை உபதேசித்த சங்கார கர்த்தாவுமாகிய பரமசிவன்—தந்த நற் கந்தர் - பெற்ற நன்மையையுடைய கந்தசுவாமியாகியும்,—இக்கு அனம் தங்கு அலைநீர்ச் செய்க்கண் ஆம் செந்திலார் - கரும்புகளானவை அன்னங்கள் இருக்கின்ற அலையையுடைய ஜலம் பொருந்திய வயல்களிலே உண்டாகப்பெற்ற திருச்செந்தூரையுடையவராகியு மிருக்கின்ற முருகக்கடவுளுடைய—தளை ஆதரிக்க - மாலையை விரும்பினமாத்திரத்தில்,—

வந்தம கலை நீத்துக் கரச்சங்கங்களை இழந்தேம் - நம்முடைய வஸ்திரத்தை நீங்கிக் கையிலிருந்த சங்கவளையல்களை இழந்தனமூ எ - று. [முருகக்கடவுள் பவனிவருதல் கண்டு மால் கொண்டு வஸ்திரமும் வளையலு மிழந்துநின்ற மகளிர் சொல் லியது.] (கஎ)

சங்கரியக்க நிகர்த்த நின்றாதை தகையதென்னச்
சங்கரியக்கரிறைஞ்செழிற்செந்திற்சடானனகஞ்
சங்கரியக்கதிர்தானிசைகின்றசரணத்திறற்
சங்கரியக்கணத்தேயெய்தசெறியந்தகற்சினந்தே.

இ - ள். சங்கரி அக்கம் நிகர்த்த நின் தாதை தகையது என்ன - உமாதேவியுடைய கண்ணைப்போன்ற உம்முடைய பிதாவாகிய பரமசிவனது செபகையைப்போல,—சங்கு அரியக்கர் இறைஞ்ச எழிற் செந்திற் சடானன-சங்கையுடைய விஷ்ணு மூர்த்தியும் இயக்கர்களும் வணங்குகின்ற அழகையுடைய திருச்செந்தூரில் வாழும் ஆறு திருமுகங்களையுடையவரே,—கஞ்சம் கரியக் கதிர் இசைகின்ற சரணத்திறல் சங்கரி - தாமரைமலரும் கருகும்படியாக ஒளி பொருந்துகின்ற உம்முடைய பாதத்திறற் கொன்றருளும்—அக்கணத்தே எற செறி அந்தகற்சினந்து - அந்தக்கணத்தே என்னைச் சேரும் இயமனைக் கோபித்து. எ - று. இயமனைக் கோபித்துக் கொன்றருளுமெனக் கூட்டுக.()

தகரனலங்க நிறைநிறத்தான செந்திற்றந்தைசங்கேய்ந்
தகரனலங்கனளிருதனத்தினன்றுழளகந்
தகரனலங்கடார்ந்நிறசத்தியன்றுளெனினந்
தகரநலங்கனன்றுலெனச்சிறிடத்தக்கரனறே.

இ - ள். தகரன் - மேடவாகனத்தையுடையவராகியும்;—நல் அங்கம் நிறை நிறத்தான - நன்மையாகிய திருமேனியிலே நிறைந்த வண்ணத்தை யுடையவராகியும்,—செந்தில் தந்தை—திருச்செந்தூரில் வாழும் பிதாவாகியும்,—சங்கு ஏய்ந்த கரன்

அலங்கல் நளினாதனத்தினன் தாழ் - சங்கு பொருந்திய கையையுடைய விஷ்ணுமூர்த்தியும் மாலையையணிந்த தாமரையாசனத்தினையுடைய பிரமதேவரும் வணங்குகின்ற—அளகம் தகரநலங்கள் தர நின்ற சத்தியன் - அளகமானது மயிர்ச்சாந்தாலாகிய இன்பத்தைத் தரும்படி நின்ற கிரியாசத்தியாகிய தெய்வயானையையுடையவராகியு மிருக்கின்ற கந்தசுவாமியினுடைய—தாளெனின் - பாதமென்பேனாயின்,—அந்தகர் அனலம் கனன்றுலெனச் சீறிடத் தக்கரன்று - யமனார் வடவாமுகாக்கினி சுவாலித்தாற் போலக் கோபித்தற்குத் தக்கவரல்லர். எ - று. (கக)

தக்கனகத்தினடறணித்தானயன்றன்கதிசந்
தக்கனகத்திகிரிக்கரனாக்கங்கடந்தளிக்கத்
தக்கனகத்தியனையாளியென்னெஞ்சதாஞ்சலசந்
தக்கனகத்தினகரன்றன்செந்திலைச்சந்திக்கினே.

இ - ள். தக்கன் அகத்தின் அடல் தணித்தான் (கதி) - தக்கனுடைய அகங்காரத்தினது வலிமையை அடக்கிய உருத்திரமூர்த்தியுடைய பதத்தையும்—அயன்றன் கதி - பிரமனுடைய பதத்தையும்—சந்தக் கனகத் திகிரிக்கரன் ஆக்கங்கள்-அழகினையுடைய பொன்மயமாகிய சக்கரத்தைத்தரித்த கையையுடைய விஷ்ணுவினது செல்வத்தையும்—தந்து அளிக்கத் தக்கன் - தந்து காக்கத்தக்கவர்—அகத்தியனை ஆளி - அகஸ்திய மகாமுனிவரை ஆண்டருளினவரும்—என் நெஞ்சதாம் சலசம் தக்கன் நகு அத் தினகரன் - என்னிதயமாகிய தாமரைமலருக்கு அன்பராக விளங்குகின்ற அந்த ஞானசூரியருமாகிய முருகக்கடவுளானவர்,—தன் செந்திலைச் சந்திக்கின-தம்முடைய திருச்செந்தூரைச் சந்திக்கில். எ - று. முருகக்கடவுளானவர் தம்முடைய திருச்செந்தூரைச்சந்திக்கில் உருத்திரமூர்த்தியினுடைய பதத்தையும் பிரமனுடைய பதத்தையும் விஷ்ணுவினுடைய செல்வத்தையும் தந்து காக்கத்தக்கவரெனக் கூட்டுக. (உ0)

சந்தத்தனத்திகடந்திறத்தாசைதலத்தினிச்சை
சந்தத்தனத்தினசைதீரடியன்றனதிலிற்சேர்
சுந்தத்தனத்தியதளான்றனயதடக்கயல்கஞ்
சந்தத்தனத்தினினங்கீழிழிசெந்திற்றங்கினற்கே.

இ - ள். சந்தத் தனத்திகள் தம் திறத்து ஆசை - சந்தனத்தையணிந்த தனத்தையுடைய பெண்களது காரணத்தாலாகிய ஆசையையும்—தலத்தின் இச்சை — மண்ணில் வைக்கப்படும் ஆசையையும்—சந்தத் தனத்தின் நசை தீர் - அழகையுடைய பொன்னிலேறும் ஆசையையும் தீர்த்தருளும்—அடியன்றனது இல் இல் சந்து சேர் அத்தன் அத்தி அதளான் தனய - தமதடியாராகிய சுந்தரமூர்த்திநாயனாருடைய மனைவியாகிய பரவையினது வீட்டிலே தூதாகச் சென்ற பிதாவும் யானையினது தோலையுடையவருமாகிய பரமசிவனுடைய குமாரரே,—தடக்கயல் கஞ்சம் தத்த நத்தின் இனம் கீழ் இழி செந்தில் தங்கினற்கு - பெரிய கயனமச்சங்கள் தாமரைமலரிலே பாய (அதின்மேற்றுயின்ற) சங்குக கூட்டங்கள் கீழே யிறங்கப்பெற்ற உம்முடைய திருச்செந்தூரிலே வந்து வசித்த எனக்கு. எ - று. பரமசிவனுடைய குமாரரே எனக்குப் பெண்களது காரணததாலாகிய ஆசையையும் மண்ணில் வைக்கப்படுமாசையையும் பொன்னிலேறு மாசையையும் தீர்ததருளுமெனக் கூட்டுக. (உக)

தங்கச்சினகரநேராக்கலந்திச்சகநிறைந்தார்
தங்கச்சினகரநேயர்தனயன்றனக்கினிதாங்
தங்கச்சினகரநீள்செந்திலுட்டிறறனகரிதங்
தங்கச்சினகரநறகனனென்னங்கடையலர்க்கே.

இ - ள். தங்கு அச்சின் அகரம் நேராக் கலந்து இச்சகம் நிறைந்தார் - பொருந்திய உயிரெழுத்துக்களுக்குள்ளே அகரமாகிய அக்கரத்தைப்போன்று உயிர்கள்தோறும் பொருந்தி இவ்வுலகத்திலே வியாபித்தவரும்—தம் கச்சி நகரம் நேயர் - தம்முடைய காஞ்சிபுரத்தில் விருப்பத்தை யுடையவருமாகிய பர

மசிவனுடைய—தனயன்றனக்கு இனிதாம் - குமாரராகிய முரு கக்கடவுளுக்கு இனியதாகிய—தமக சினகரம் நீள் செந்தில் நாட்டில் - பொன்னுலாய கோயிலானது உயர்ந்திருக்கப் பெற்ற திருச்செந்தூரைத் தன்னிடத்துடைய நாட்டின்கண்ணே—கரி தந்தத் தனம் கச்சில் நகர நறகனன் என் நஙகள் தையலர்க்கு - யானைக்கோட்டைப் போலும் தனங்கள் கச்சுள்ளே நின்றும் பிதுங்குதற்கு நல்ல கனம் யாது காரணத்தாலுண்டாயது எங் களுடைய பெண்ணுக்கு? எ - று. பாங்கியே நீ சொல்லென்பது எஞ்சி நின்றது. [செவிலி தலைவியினது முலை யிறுமாப்பைக் கண்டையுறறுப் பாங்கியை வினவல்.] (உஉ)

அலரிநனந்தலையாழிகண்டாஙகுச்சிகியினிடை
யலரினனந்தநிகரயிலான்செநதிலாயிழையை
யலரினனந்தநினைநிலநதேர்ந்ததறகன்றயலா
ரலரினனந்தஞ்சொலற்கிடனுநெஞ்சழிகின்றதே.

இ - ள். ஆழி நனந்தலை அலரி கண்டாஙகு - சமுத்திரத்தி னது நடுவிலே சூரியன் தோன்றினுறபோல—சிகியினிடை அலர் இனன் - மயில்வாகனத்திலே விளஙகுகின்ற தலைவரும்,— அந்தம் நிகர் அயிலான்—அழகிய ஒளிபொருந்திய வேலாயுத த்தை யுடையவருமாகிய முருகக்கடவுளது—செந்தில் ஆயிழை - திருச்செந்தூரிலிருக்கும் பெண்ணுக்கு—ஐயலர் இனல் நந்த நினை நிலம் தேர்ந்ததற்கு - ஐந்து புஷ்பபாணஙகளாலாகிய துன்பங்கெடும்படி உன்னை இந்நாட்டின்கண்ணே தேடியத றகு—அன்று அயலார் அலரின் அனந்தம் சொலற்கு இடனு நெஞ்சு அழிகின்றது - அந்நாளிலே அயலவர்கள் பழிமொழி யாக அளவில்லாத வார்த்தைகளைப்பேசுதலுக்கு இடமாக மனம் வருந்துகின்றது. எ - று. [அலரறிவுறுத்தல்.] (உ௩)

தேயத்தியங்கியலகிறலங்களிற்சென்றடிக
டேயத்தியங்கியலையறிடங்கதிசேர்தலறைந்

தேயத்தியங்கிளைத்திலந்தானெறிசெந்திலடைந்
தேயத்தியங்கிதரித்தான்றனயற்றெரிசிக்கினே.

இ - ள். தேயத்து இயங்கி அலகில் தலங்களில் சென்று அடிகள் தேய தியங்கி அலையல்-தேசங்கள்தோறுஞ் சஞ்சரித்து அளவில்லாத க்ஷேத்திரங்களிலே போய்க் கால்கள் தேயும்படி தியங்கி அலையாதே,—க்தி சேர்தல் திடம் - மோக்ஷத்தை அடைதல் நிச்சயம்:—அறைந்து அத்தி அங்கு இனம் நித்திலம் எறி செந்தில் அடைந்து - ஆரவாரித்துச் சமுத்திரயானது அவ்விடத்திற் கூட்டமாகிய முத்துக்களைக் கரையிலெறியப்பெற்ற திருச்செந்தூரைச் சேர்ந்து,—ஏய் அத்தி அங்கி தரித்தான் தனயன் தெரிசிக்கின் - அவ்விடத்திலிருக்கின்ற எலுமபையும் அக்கினியையும் தரித்த பரமசிவனுடைய குமாரராகிய முருகக்கடவுளைத் தரிசிக்கில். எ - று. முருகக்கடவுளைத் தரிசிக்கில் மோக்ஷத்தையடைதல் நிச்சயமெனக் கூட்டுக. மூன்றுமடியின் முதலிலிருக்கும் ஏகாரம அசைநிலை. (உசு)

சிக்கத்தனங்கடிறக்கின்றகன்னியர்சிந்தைகணே
சிக்கத்தனங்களளித்தழிந்தேறகெழிற்செந்திற்றரி
சிக்கத்தனங்கழலையேத்தநல்கினன்சீர்நிறைகாசி
சிக்கத்தனங்களகிலேசன்றந்ததிறற்கந்தனே.

இ - ள். சிக்கத தனங்கள் திறக்கின்ற கன்னியர் சிந்தைகள் நேசிக்க-கண்டவர்கள் தங்களிடத்தில் அகப்படும்படி முலைகளைத் திறவாநின்ற பெண்களுடைய மனம் விரும்பும்பொருட்டு—தனங்கள் அளித்து அழிந்தேற்கு - திரவியங்களை அவர்களுக்குக் கொடுத்துக் கெட்டவனுகிய எனக்கு—எழில் செந்தில் தரிசிக்க - அழகையுடைய திருச்செந்தூரைத் தரிசிப்பதற்கும்,—தன் அம் கழலை ஏத்த - தம்முடைய அழகிய பாதத்தைத் துதிப்பதற்கும்,—நல்கினன் - அருள்செய்தார்—சீர் நிறை காசிக் கத்தன் நங்கள் அகிலேசன் தந்த திறல்கந்தன் - சிறப்புப்பொருந்திய காசியில் வீற்றிருக்கும் கருத்தாவாகிய எங்கள் விசுவநாத

சுவாமிபெற்ற வலிமையையுடைய கந்தசுவாமியானவர். எ - று. கந்தசுவாமியானவர் எனக்குத திருச்செந்தூரைத் தரிசிப்பதற்கும் தம்முடைய பாதத்தைத துதிப்பதறகும் அருள்செய்தாரெனக் கூட்டுக. (உரு)

கந்தரங்கானந்தனிறசென் றடங்கிலென்காசிக்கசே
கந்தரங்கானந்தநண்ணிலென்கன்னியர்கட்டளக
கந்தரங்கானந்தநின் றெழிற்செந்திற்கண்டிறைஞ்சிக
கந்தரங்கானந்தநல்கச்சனனங்கடந்திலரே.

இ - ள். கந்தரம் கானந்தனில் சென்று அடங்கில் என் - முழையிலும் காட்டிலும் போய்ப் புலனொடுங்க இருந்ததனாற் பயன் யாது?—காசிக்கு அநேகந்தரம் கால நந்த நண்ணில என - காசிக்கு அநேகமுறை கால்கள் வருந்தும்படி போனதினாற் பயன் யாது?—கன்னியர் கந்தரம் கட்டு அளகம் கான நந்த நின்று ஆடு எழில்செந்தில் கண்டு இறைஞ்சி - பெண்களை மேகம போலும் நிறத்தையுடைய கட்டபபட்ட அளகததிலே வாசம் மிக நின்று நடிக்கின்ற அழகையுடைய திருசசெநதூரைத தரிசித்து வணங்கி,—கந்தர் அங்கு ஆனநதம நலக - முருககடவுள் அவ்விடத்திற சிவானந்ததததை அருள—சனனம கடந்திலர் - அதனாலே தஙகள் பிறவியை நீங்காதவாகள. எ - று. சிவானந தம்போற் கர்மயோகங்கள் பயன் படாவென்பது கருத்து.(உசு)

கடனந்திநாகத்ததளாடையாயெனைக்காக்கலிற்கே
கடனந்திநாணிறத்தாயெனநாரணனகண்டிறைஞ்செந
கடனந்திநாதன்றனயனற்செந்திலிற்காரிகையே
கடனந்தியங்காதலர்தேரிறகலிக்கின்றதே.

இ - ள். கடம் நந்து இல் நாகத்து அதள் ஆடையாய் - மதங் கெடுதலில்லாத யானையினது தோலாகிய வஸ்திரத்தையுடையவரே—எனைக் காக்கல் நிற்கே கடன் - அடியேனை இரட்சித்தல் உமக்கே கடனும்—அந்தி நாண் நிறத்தாய் என - செக்கர்

மேகம் நாணத்தக்க செந்நிறத்தையுடையவரே என்று—நாரணன் கண்டு இறைஞ்சு எங்கள்தம் நந்தி நாதன் தனயன் - விஷ்ணுமூர்த்தி தரிசித்து வணங்குகின்ற எங்களுடைய நந்தியென்னும் பெயரைப்பொருந்திய பரமசிவனுடைய குமாரராகிய முருகக்கடவுளது—நற்செந்திலில் காரிகையே - நன்மையாகிய திருச்செந்தூரிலிருக்கும்பெண்ணே,—கடல் நந்தின் நாயகன் காதலர் தேரில் கலிக்கின்றது - சமுத்திரத்திலே தோன்றிய சங்குகளுடைய நாயகமாகிய வலம்புரி உன்னுடைய தலைவரினது தேரிலே சத்திக்கின்றது. எ - று. [பாங்கி வலம்புரிகேட்டுத் தலைவனது வரவறிவுறுத்தல். (உஎ)

கணைக்காகநாய்கடின்காயநிலையெனக்கண்ணியென்ன
கணைக்காகநானலைந்தெய்த்தேனெழிற்செந்திற்கந்தநெற்றிக்
கணைக்காகனார்தந்தநின்றனையேயினிக்காதலினாற்
கணைக்காகனிகர்ந்தேயழியங்கத்தின்காதலறவே.

இ - ள். கணைக் காகம் நாய்கள் தின காயம் நிலை எனக் கண்ணி - கூட்டமாகிய காகங்களும் நாயகளும் உண்கின்ற சரீரத்தை நித்தியமென்று நினைத்து,—என்ன கணக்கு ஆக நான் அலைந்து எய்த்தேன் - என்ன தாற்பரியத்தின்பொருட்டு யான் அலைந்து இளைத்தேன்?—எழில் செந்தில் கந்த - அழகையுடைய திருச்செந்தூரில் வீற்றிருக்குங் கந்தசுவாமீ,—நெற்றிக்கண் அக்கு ஆகனார் தந்த நின்றனையே - நெற்றிக்கண்ணையும் எலும்பு மணியைத் தரித்த திருமேனியையுமுடைய பரமசிவன் பெற்ற உம்மையே—இனிக் காதலினால கணைக் கா - இனி விருப்பத்தினாலே தியானிக்கும்பொருட்டு (இடையூறுவாராமற்) காத்தருளும்—கனா நிகர்த்து அழி அங்கத்தின் காதல் அற - சொப்பனத்தைப் போன்று அழிகின்ற சரீரத்தில் வைத்த விருப்பம் நீங்கி. எ று-

கண்ணை என்றது கணை என இடைக்குறைந்து நின்றது. சரீரத்தில் வைத்த விருப்பம் நீங்கி உம்மையே தியானிக்கும்பொருட்டுக் காத்தருளுமெனக் கூட்டுக. (உஅ)

காதலையானின்றனக்காக்கினனினிக்காயந்தந்தே
காதலையானின்றனக்காரணனடிக்கஞ்சங்கணீங்
காதலையானின்றகங்கரைந்தேத்தரன்கண்ணியராக்
காதலையானின்றசங்கரன்சேய்செந்திற்காங்கெயனே.

இ — ள். காதலை யான் நின்றனக்கு ஆக்கினன் - விருப்பத்தை நான் உம்மேல் வைத்தேன்;—இனிக் காயம் தந்து காதல்- இனிச் சரீரத்தைப் படைத்துக் கொல்லாதொழியும்.—ஐயான் - சூக்குமரூபியும்—இன் தனம் காரணன்-இனிமையாகிய அருட்செல்வத்துக்குக் காரணரும—அடிக் கஞ்சங்கள் நீங்காது அலையான் நின்று அகம் கரைந்து ஏத்து அரன் - தம்முடைய பாதமாகிய தாமரைமலர்களை நீங்காமல் திருப்பாற்கடலிலே நித்திரைசெய்யும் விஷ்ணுமூர்த்தி முன்னின்று மனம உருகித் துதிக்கப்பெற்ற சங்காரகாத்தாவும்—கண்ணி அராக் காது அலையானின்ற சங்கரன் சேய - மாலையாகச் சர்ப்பம் காதுகளிலே அசைகின்ற சுகஞ்செயபவருமாகிய பரமசிவனுடைய குமாரரே,— செந்தில் காங்கெயனே - திருச்செந்தூரிலிருக்கின்ற கங்காபுத்திரரே. எ - று. சனனமரண துக்கங்களை நீக்கி நித்திய பேரின்பமயமாகிய மோக்ஷத்தைத தந்தருளும என்பது கருத்து. (௨௧)

காயங்கலையநலியந்தகனணைகாலஞ்செய்ய
காயங்கலையதளானிலநீரழல்காறறெழிலா
காயங்கலையனலரிசித்தாயினன்காதலழ
காயங்கலையதிருஞ்செந்தில'யெனககனறனெஞ்சே.

இ - ள். காயம் கலைய நலி அந்தகன் அணை காலம் - சரீரம் நீங்கும்படி வருத்துகின்ற இயமன்வருங்காலத்திலே—செய்ய காயம் கலை அதளான் - (சாக்கியநாயனாரெறிந்த) செங்கல்லாகிய சிவந்த தழும்பையும் கலைமானினது தோலையுமுடையவராகியும்—நிலம் நீர் அழல் காறறு எழில் ஆகாயம கலையன் அலரி சித்து ஆயினன் - பிருதிவியும அப்புவும் தேயுவும் வாயுவும் அழகையுடைய ஆகாசமும் சந்திரனும் சூரியனும் ஆன்மா

வும் ஆனவராகியுமிருக்கின்ற பரமசிவனுடைய—காதல் அழகு ஆய் - குமாரராகிய முருகக்கடவுளினது திருவுருவத்தைத் தியானி;—அங்கு அலை அதிரும் செந்திலாய் என்க - அவ்விடத்தே சமுத்திரம் ஒலிக்கின்ற திருச்செந்தூரை யுடையவரே என்று சொல்லு;—கன்றல் நெஞ்சே - வருந்தாதொழி என்மனமே. எ - று. என்மனமே இயமன் வருங்காலத்திலே வருந்தாதொழி முருகக்கடவுளினது திருவுருவத்தைத் தியானி திருச்செந்தூரையுடையவரே என்று சொல்லு எனக்கூட்டுக. சரீராந்தியத்திலே மனமானது எப்பொருளிலே சிந்தனை வைத்ததோ அப்பொருளே கைகூடும் என்பது சாத்திரசித்தம் ஆதலால், இப்படிச்சொன்னார். எக்காலத்திலும் இடைவிடாமல் வைத்த சிந்தனை எதுவோ அதுவே சரீராந்தியத்திலும் வருவது ஆகையால், முருகக்கடவுளைத் தியானித்தலை எக்காலத்திலும் இடைவிடாது செய்தாலொழியச் சரீராந்தியத்திலே செய்தல் கூடாது எனவும், அதனால் எப்பொழுதும் தியானிக்கவேண்டும் எனவும் அறிந்துகொள்க. (நூ)

திருச்செந்திநிரோட்டகயமகவந்தாதியுரை

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதி துணை.

# கல்வளையந்தாதி.

யாழ்ப்பாணத்து நல்லூர்

**சின்னத்தம்பிப்புலவர்**

அருளிச்செய்தது.

---

இஃது

மேற்படியூர்

வித்துவசிரோமணி

ஸ்ரீமத்

**ந. பொன்னம்பலபிள்ளையவர்கள்**

மாணாக்கர்

**சி. தம்பையாபிள்ளையால்**

சென்னபட்டணம்:
ஆறுமுகவிலாச யந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

---

ஜய௵ கார்த்திகைமீ. ...ளிளி சங்
இதன்விலை அணா - ...வ்ளட்புந
நள் காதலனே.
1874

## ஆக்கியோன்பெயர்.

செம்பொற் குவட்டினிற் பாரதந் தீட்டிய கோட்டினன்சீர்க்
கம்பக் கரிமுகன் கல்வளை வாழுங் கணபதிக்கு
நம்பற் கினியமுற் சங்கத்து நூலென நல்லைச்சின்னத்
தம்பிப் புலவனல் லந்தாதி மாலையைச் சாற்றினனே.

உ

கணபதி துணை.

# கல்வளையந்தாதி.

## காப்பு.

தார்கொண்ட பூமல்லி கைச்சேக்கை யிற்றும்பி சாலப்பம்புஞ்
சீர்கொண்ட கல்வளை யந்தாதி பாடத் திரைக்கடல்சூழ்
பார்கொண்ட பல்லுயிர்க் கானந்த மும்மதம் பாயுங்கும்பக்
கார்கொண்ட கம்பக் களியானை முன்னின்று காப்பதுவே. (௧)

ஒன்றா யிருசுடர் முத்தொழி னான்மறை யோதுமைந்தாய்
நன்றாய வாறங்கம யாவுக்குங் காரண நாதனுமாய்
நின்றாய்நின் கல்வளை யந்தாதி பாடவென் னெஞ்சகத்துப்
பொன்றா வருள்புரி வாயானை மாமுகப் புங்கவனே. (௨)

## நூல்.

கற்பக நாடர் பதின்சதக் கண்ணனெண் கண்ணன்றொழுங்
கற்பக வஞ்சி யிடக்கண்ணனை றந்தமுக் கண்ணனன்றிற்
கற்பகவேலெறி வேடனை வன்கல் வளைப்பதிவாழ்
கற்பக நன்னிழல் சேர்ந்தார் கருக்கரை கண்டவரே. (௧)

கண்டலம் போதைப் புளினமென் றோர்ந்துகங் கம்பதுங்கிக்
கண்டல மார்ந்து சிறகாற்றுங் கல்வளைக் கற்பகநின்
கண்டல மூன்று மெனையாள்பொற் பாதமுங் காணவின்று
கண்டலன் போற்கண் படைத்திலன் வாசக் கமலத்தனே. (௨)

கவூனரம் பையஞ் சுரும்பு விரும்பு கருங்குழற்போ
கவானரம் பைக்குலம் போற்றிட வாழ்தல்கண் ணேனினிச்சங்
கவ்வானரம் பைங்க தலிக்கனி சிந்திடுங் கல்வளைப்புங்
கவாகரம் பைத்திகழ் யாழ்க்கூற் றுமையருள் காதலனே. (௩)

அருளத் தனந்து சிலைக்கதை வாள்சட ராழிகொள்ளை
யருளத் தனந்தர் தெரியா வகைநிற்கு மைம்முகனீன்
றருளத் தனந்த வனஞ்சூழுங் கல்வளை யண்ணலடி
யருளத் தனந்தரம் வாழ்வானென் றல்வினை யஞ்சிடுமே. (௪)

அஞ்சத் திரத்தன் முழவெண வேகொதித் தார்த்தரப்பி
யஞ்சத் திரத்தந் தகனவரும் போதுன் னபயநடை
யஞ்சத் திரத்த வடிவா ணயனத் தமலைபெற்ற
வஞ்சத் திரத்தன் றுணைவாதென் கல்வளை யானந்தனே. (௫)

தனந்தனந் தந்தி மருப்பன்ன மாதர் தரைவிரும்பு
தனந்தனந் தந்திகழ் தண்டுறை தோறுமென் சஞ்சரிகந்
தனந்தனந் தந்திமி யென்கல் வளையன்சங் கக்குழைக்கா
தனந்தனந் தந்தமொன் றென்று நெஞ்சந் தனிலுன்னமே. (௬)

சந்தன மின்னுபொற் கச்சணி பாரத் தனதடம்ப
சந்தன மின்னிடைப் பூவஞ்சிக் கொம்பனை தையலுட்க
சந்தன மின்னலுற் றுள்கல் வளையன் றனதிடம்போஞ்
சந்தன மின்னம் வரக்கண் டிலோமென்ன தாமதமே. (௭)

தாமதிக் காந்தச் சிலைபோன் மனத்தினைத் தந்தசைகா
தாமதிக் காந்தகை மென்மொழிப் பூமின் றலை[illegible]வே
தாமதிக் காநதர மாகிநின் றேன்மைந்த தண்ணிதழித்
தாமதிக் காந்தம் புகழ்கல் வளையநின் றட்கஞ்சமே. (௮)

கஞ்சக் கரந்தனின் மூவிலை வேல்கும்பங் கார்முகஞ்சங்
கஞ்சக் கரங்கதை மாதுள மேந்தி கவின்களம்பூ
கஞ்சக் காம்பயில் வேல்வல வைக்கொரு காந்தன்பொன்று
கஞ்சக் கரப்புவி கும்பிடுங் கல்வளைக் கைவரையே. (௯)

வரையாரம் பாலன்ன தோணகை வாணி வலவை[illegible]ணை
வரையாரம் பார்சடை யார்கல் வளைவெற்ப வண்ணமுத்தேன்
வரையாரம் பாளிதப் பூட்கொங்கை மீது வயங்குதொய்யில்
வரையாரம் பால விழியா ளிடையின் வறுமைகண்டே. (௧௦)

மைக்கண்ட னேறிய தேரச் சறுக்கும் வரதன்வெந்தி
மைக்கண்ட நம்மையொட் டாவைங் கரத்தண்ணல் வாழுமிடம்
மைக்கண்டவள நகையார் குடையு மடுவினின்மா
மைக்கண்ட னீழலிற் சங்கீனுந் தென்கல் வளைப்பதியே. (கக)

கல்வளை யாத விரும்புநெஞ் சேகைய ரோடுறவா
கல்வளை யார்சுளை வாயரக் காம்பல்செங் காவியின்பக்
கல்வளை யார நிலாவீச விள்ளுங் கழனிசுற்றுங்
கல்வளை யானங் குசபாச மேந்துங் கரன்புகழே. (கஉ)

கரும்பனை யத்தனைப் பூவே ழிடந்தசெங் கண்விடைப்பா
கரும்பனை யத்துவக் கீர்த்துடல் போர்த்த கடவுண்மொழிக்
கரும்பனை யத்தன்கை மாங்கனி வாங்கிய கல்வளைமா
கரும்பனை யத்தனை யான்மற வேன்புன் கவிதைகொண்டே. (கரு)

கவிநாய கன்றிடு வாய்க்கிரைப் பண்டங் கறையிரத்தக்
கவிஞய கன்மக் குடம்பையை வீக்கியென் கண்டபயன்
கவிநாய கன்றொழும் ராமன் கொலைப்பவங் காய்ந்திடுதுங்
கவிநாய கதிருக் கல்வளை வாழுங் கணபதியே. (கச)

கணத்தலை வன்குழ விப்பிறைக் கோட்டன் கதிர்மணிப்பைக்
கணத்தலை வன்னச் சராக்கச் சரையன் களமரில்லங்
கணத்தலை வண்ண வளையூருங் கல்வளை காணிலரைக்
கணத்தலை வற்பகை முன்பணி மாலுங் கருதிடினே. (கரு)

கரியான னத்தன் றொழுபதம் வேண்டிற்கண் ணூர்பவஞ்சங்
கரியான னத்த மவர்க்கிழைப் பான்கடற் காசினிக்கோர்
கரியான னத்தம் புரிகோட்டுக் கல்வளைக் கன்னமத
கரியான னத்தன் புகழ்பாடி யுள்ளங் கசிந்திடுமே. (கசா)

சிந்தா மணிதென்ற லன்றி னிலாப்பகை செய்யவணி
சிந்தா மணிமுலை வாடின ளேழு செகமளந்த
சிந்தா மணிதுளை வன்றேடு கல்வளைச் செய்யுவருட்
சிந்தா மணிவாரக் காணேன் பயோதரச் செல்லினமே. (கஎ)

தரங்க வளைக்க ரொலிவே யிசைநனி தாக்கத்துப்ப
தரங்க வளைக்கரிக் கொங்கைக் குதவிலன் றுரைநிமந்
தரங்க வலைப்பட வென்னை விடாமத தந்திசொல்லந்
தரங்க வளைக்கல் வளைப்பதி மேவிய தற்பரனே. (௧௮)

பரசங்க முத்தமிழ் கல்லா வெனையனைப் பாவிதிகம்
பரசங் கரவென்று மெய்நொந்து பெற்ற பலனன்றிதா
பரசங் கமவுயி ருக்குயி ராய பரஞ்சுடரே
பரசங்க மாறந் தனர்போற்றுங் கல்வளைப் பண்ணவனே. (௧௯)

அவலம் புரிமுக் குறும்பைந்து பூத மடக்கிமென்று
யவலம் புரிமலர் தூய்த்தொழு [illegible]க்த வருண்மெய்யர்மெய்
யவலம் புரிமருப் புத்தக ரூரு மறுமுகன்முன்
னவலம் புரிவயற் கல்வளை யாலயத தாதிக்கனே. (௨0)

திக்குடை யானடி யைப்போற்றிப் பூவலஞ்சென்று செஞ்சோ
திக்குடை நீழலின மேவந்த ணீர்செப்பு வீரெனறன்பத்
திக்குடை யான்கல் வளையான் சிலம்பினிற் றேன்பண்ணையோ
திக்குடை யோதிச்செங் காலியுங் காளையுஞ் சென்றதுவே. (௨௧)

வேதா ரணிய முறைவேயின் முத்தருள் வேழமுய்ய
வேதா ரணியம்பொ னோடேத்து கல்வளை வெற்பன்னமே
வேதா ரணிய மலைதிருக் கோயில விளங்கநின்பால்
வேதா ரணியந்த காரநம் பாலில் விதித்தனனே. (௨௨)

தனையா யுதவிய தந்தையில் வாழ்க்கை தணந்தருட்சிந்
தனையா யுதகந் தனிநின்று செய்யுந் தவத்திர்வெண்டந்
தனையா யுததி யகிலம் படைக்குஞ் சதுர்விதவே
தனையா யுதன்றொழுங் கல்வளை யானைச் சரண்புகுமே. (௨௩)

சரந்தண் டருமலர் வேண்மைத்துனன் செந்தமிழ்க் கலைபஞ்
சரந்தண் டலையிற் கிளிதேருங் கல்வளை தங்கிடுகுஞ்
சரந்தண்ட பாணி யழகினைக் காணப்பொற் றாமரைவா
சரந்தண்டர் போல விமையாத பார்வையைத் தந்திலரே. (௨௪)

தந்தனந் தாமரை வெற்பிரு ணேரிடை சாய்நடையா
தந்தனந் தார்க்குழல் யாமள கோமள சாமளப்பெண்
டாந்தநந் தாபணை னெல்விளை கல்வளை தன்னிலொற்றைத்
தந்தநந் தாவிளக் கேயெனப் போமிருட் சம்பந்தமே. (௨௫)

சம்பந்த மாவினைத் தென்னவற் கீந்தவன் றுங்குமருட்
சம்பந்த மாமுனி பாமாலை சூடி தருபொருண்மா
சம்பந்த மாலம் புனைசூழுங் கல்வளைத் தந்திவெம்பா
சம்பந்த மாயையென் பாணீக்கி வாழ்வுசம் பாதிப்பனே. (௨௬)

பாலை வனத்தத்தைக் கியாரளிப் பாரென்று பன்னினளும்
பாலை வனத்தடங் கார்கண்டு வெட்கும் படிவந்தமின்
பாலை வனத்தகன் றுள்கல் வளைப்பர மானந்தன்றன்
பாலை வனத்தள வும்மன் பிலாரிற் பதைபதைத்தே. (௨௭)

தைக்கும் பகழி யுடல்பாய் தறுகட் சயிலம்வந்த
தைக்கும் பகண தனத்தீர்கண் டீரெனிற் சாற்றிடுமே
தைக்கும் பகனன்முன் ஞேனைப்பந் தாடித் தகர்த்துரஞ்சி
தைக்கும் பகவன்றென் கல்வளை வாசன் றடமலைக்கே. (௨௮)

மலைவல் லியம்பிரி யாத்தில்லைக் கானுறை மாமதங்கி
மலைவல் லியம்பிள கீரின் பயோதரி வாணிமைய
மலைவல் லியம்பிகை கான்முளை கல்வளை வாணன்பொங்க
மலைவல் லியம்பர வைய்யானெய் யாமுன் வரவல்லையே. (௨௯)

வரம்பல வன்பருக் கீவா ரெனக்குமெய் வாழ்வுதரு
வரம்பல வுன்கொன்றை மாலிகை யாத்தி வனைந்தகற்ற
வரம்பல வன்பெற்ற மாதங்க வானனர் மள்ளர்செய்யும்
வரம்பல வன்குண் டலர்மூடுங் கல்வளை வானவரே. (௩௦)

வானஞ் சலஞ்சலத் தீயொலி மண்மயங் காவுயிர்போ
வானஞ் சலஞ்சலம் வந்திடுங் காற்றுயர் மாற்றவரு
வானஞ் சலஞ்ச லெனவுரைப் பான்கல் வளைப்பதிவாழ்
வானஞ் சலஞ்சலக் கைத்தல மாறன் மருமகனே. (௩௧)

மகரந் தவள மலர்ச்சோலைப் பொங்கரின் வான்குளிரி
மகரந் தவழ்கல் வளையாகு வாகன வல்லவைவா
மகரந் தவள மருப்பானை வேங்கை மடங்கலெண்கு
மகரந் தவளைபுள் ளாறுலு நின்னை மறப்பரிதே. (௯௨)

அரவம் புலிங்க வனற்கண்ண வென்றரி போற்றச்சிலம்
பரவம் புலிபணி கேட்பமன் றாடி யருண்மதலை
யரவம் புலியணி கோடீரன் கல்வளை யண்ணல்கண்ணே
யரவம் புலிய குணத்தா ரெனினு மவர்முத்தரே. (௯௩)

தரப்பணி யாரம் பலபூண்டு தேர்முதற் றானைதற்சூழ்
தரப்பணி யாரைத் தடிந்தால காள்தலிற் சர்க்கரைச்சுந்
தரப்பணி யார மமுதுசெய் வோன்கல் வளைத்தலத்தா
தரப்பணி யார்வத் தொடுஞ்செய்து வாழ்த நகவுடைத்தே. (௯௪)

தகரங் கமழ்குந் தளந்தர ளத்தள வின்னகையீர்
தகரங் கமலன் மணக்கோலஞ் செய்த நடாதிருபா
தகரங் கமலஞ் சிவந்தோன் மருகன் றவமற்றபா
தகரங் கண்மேவருங் கல்வளை யான்மலைச் சாரலிலே. (௯௫)

இலங்கை யிராவணன் கண்டதுண் டம்பட வெய்சரம்ப
யிலங்கை யிராமன் கடதாரை சிந்தி யிரண்டிருகோ
டிலங்கை யிராவதன் றாழ்கல் வளைய னெனின்முத்திவா
யிலங்கை யிராது கடைத்தா டிறப்பிப்ப னேரம்பனே. (௯௬)

அம்பலங் காசில் வயல்சூழுங் கல்வளை யையங்கரனுட்
டம்பலங் காசியென் றுய்கேள்வர் பின்செ லவர்மதலா
யம்பலங் காசின் முலையாணின் கைதந்த வாசறப்பொன்
னம்பலங் காசிசென் றேவா தரவென் னருஞ்சொர்க்கமே. (௯௭)

கமண்டலம் பாற்கரன் போலாழி யேந்துங் கடவுளர்நா
கமண்டலம் பாதளங் கைகூப்பு தாளென்று காட்டுவையர்க்
கமண்டலம் பார்க்குமுய் யானம் வளைக்குங் கழனியிற்சங்
கமண்டலம் பாய முழங்கிடுங் கல்வளைக் காரணனே. (௯௮)

காரண வாத திரிசூல பூத கணேசவன்பா
காரண வாததென் கல்வளை நாத கடம்பணிவா
காரணி வாத முதலேந் தினைவைத்துக் காத்தழிக்குங்
காரண வாத நடந்தை யுலாவுங் கலகத்திலே. (௩௧)

கலகத் தமரத் திரையின் றுயரைக் களைந்தருட்ச
கலகத் தமர கதக்கம்பி யாற்செய் கடுக்கைபுல்ல
கலகத் தமரளி வாழ்சோலைக் கல்வளைக் கற்பகவென்
கலகத் தமரவிந் ததிருக் காலெந்தக் கால்வைப்பதே. (௪0)

வையத் திருக்கை யறுப்பா னெனினம் வளைமணிக்கு
வையத் திருக்கை கயிலையில் வெண்மங்கு னோர்கல்வளை
வையத் திருக்கைப் பரியாக்கி பிள்ளைக்கு மானனையார்
வையத் திருக்கை யயர்ந்தாளென் றோது மதுகரமே. (௪௧)

கரவடம் பத்தி யிலார்க்களிப் போயிருள் காய்ந்திடும்பாற்
கரவடம் பத்தி யொளிபாய் மூலைச்சக கரிபெறுமைங்
கரவடம் பத்திரக் காறுஞ்சு மான்மரு காசந்த்ரசே
கரவடம் பத்திரட் கல்வளை யூயெனைக் காத்தருளே. (௪௨)

அருந்துதிக் கையமில் கற்பிந்த மேனை யசலவரை
யருந்துதிக் கைக்கு மகளாய்ப் பிறந்திடு மன்னைவிட
மருந்துதிக் கைப்புனை கூறைப் பிறுகி யருள்கல்வளை
யருந்துதிக் கைக்குன்ற மேயடி யேனுன் னடைக்கலமே. (௪௩)

அடைக்கலங் காவென்ற பேர்க்கினி யான்மட வன்னக்கண
மடைக்கலங் காரஞ் சினையென் றணைகல் வளைவரைவா
யடைக்கலங் காட்டுந் தனத்தீர் விரக மகலப்பொன்னி
லடைக்கலங் காக்கவென் றென்றோ குணநிசை யாவதுவே. (௪௪)

வனத்தானை யன்றொழு மம்மானை யம்புலி மானணிசெவ்
வனத்தானை யன்ன வயற்கல் வளைப்பெரு மானைமறை
வனத்தானை யனக் களைமலை மான்மரு மானையைம்பூ
வனத்தானை யன்புசெய் வார்முலைப் பாலை மறந்தவரே. (௪௫)

தவராக மாகண கச்சிலை கோலிபொற் றுள்பெறமைத்
தவராக மாக விடந்தவன் சாபந் தவிர்த்தவன்மா
தவராக மாகநற் காமுரல் கல்வளைத் தந்திரன்மா
தவராக மாகரன் கண்ணுறு பூக்கொன்றைத் தாமத்தனே. (சசு)

மத்தன் பராபரை சீராட்டு பிள்ளை மணிமந்தர
மத்தன் பராவிச் சிவந்திடு சேவடி வாய்ந்தபது
மத்தன் பராகவெண் ணீறணி கல்வளை வானவனு
மத்தன் பரான வரன்றே கயிலையி வாழ்பவரே. (சஎ)

பவநம் புயர்தொண்டாக் கில்லாமை யாக்கும் பரன்கனனீர்
பவனம் புயங்க முடியேந்து மண்வின் படிவன்கருப்
பவனம் புயலளக் குங்கல வளைப்பதி மீதிலுறை
பவனம் புயன்றொழும் பாதாம் புயனெம் பரதெய்வமே. (சஅ)

பரமாநந் தக்கன் மழைமாரி காததிடும் பைங்கணகாம்
பரமானந் தக்கந் தரவிந் திராணி பதயயனும்
பரமானந் தக்கல் வளையத்த னுத்தம பத்மாசித்தன்
பரமானந் தப்பிள்ளை யார்துணைச் சேவடிப் பங்கயமே. (சகூ)

பங்கைய மாலை யளிக்குழல் வாய்முலை பன்மொழிகோ
பங்கைய மாலை யனையாட் குதவரன் பாலன்றடப்
பங்கைய மாலை யலர்கல் வளைக்கண் பரிந்தொருகூ
பங்கைய மாலையத தொட்டியற் றுரெப் படியுய்வரே. (ருo)

வருந்தும் பிறவி யலைவாரி நீந்த மதுவினைக்க
வருந்தும்பி வீழ்மலர்த் தாட்புணை தாகன்னல் வான்கதிர
வருந்தும் பிரகாசப் பொற்றேர் தடுக்கும் வளக்கல்வளை
வருந்தும்பி மாமுகத் தையாமெய் யாகுண்ட வண்டியனே. (ருக)

வண்ட மருங்குலை யான்மரு கன்கல் வளைச்சிலம்பா
வண்ட மருங்குலை ஞாளியு மாறு வருமதர்வாய்
வண்ட மருங்குலை விற்கொண்ட வேட்டுவர் மாவலிது
வண்ட மருங்கு விளவஞ்சி பாலல்லின் வாரலையே. (ருஉ)

வாரிக் கடுக்கை தனையண்டர் சொல்ல வரவெனைநீர்
வாரிக் கடுக்கையி னற்பார்வி யீர்கன் மனத்துவைத்தேன்
வாரிக்கடுக்கைமென் ருன்றுஞ்ச காமயி லாடக்கண்டு
வாரிக் கடுக்கைசெம் பொன்றூற்று கல்வளை வாசனையே. (௫௩)

வாசவ னந்தர நாட்டோர் துதிக்கு மதக்கலுழி
வாசவ னந்தற்கு ஞானோப தேசம் வழங்குமெய்யா.
வாசவ னந்த வளவளை சேர்கல் வளைப்பதியின்
வாசவ நந்த ரவிபோலுன் ருடலை வைத்தருளே. (௫௪)

அருக்கரைக் கன்ன ெருடுங்கல் வளைய னறுகிதழி
யருக்கரைக் கன்னங்கை யைத்தந்தை யாயுடை யான்வினைநே
யருக்கரைக் கன்னலிற் நீர்ப்பான் வரைமின்ன ராமணிப்பை
யருக்கரைக் கன்ன நடைக்கென்ற ஞவி யகன்றதுவே. (௫௫)

அகம்பத்தர் நெஞ்சமுங் கல்வளைக் கோட்டமு மானவன்றீ
யகம்பத் தரைச்சங் கரித்தோன மருகன்றனை டாழிவெள்ளி
யகம்பத் தரென்றளி யூதாத பூவிறைத் தன்புருகி
யகம்பத்தர் தாம்பெறும் பேறய னலு மளப்பரிதே. (௫௬)

அப்பா தகமல நீக்கிச் சிலம்பிசை யார்த்திடுங்கோ
லப்பா தகமலம் பூசித்து நேசிக்க வன்புதவா
யப்பா தகமலங் கார்வயற் கல்வளை யாதிபொன்ரு
தப்பா தகமலந் தாங்குஞ் சடைக்கரு ணகரனே. (௫௭)

கருவரும் பாயயி னேக்கியர் தூறுகற் றுக்கற்றுப்ப
கருவரும் பாயப் படேலன்ன மேகல் வளைக்களிற்றைக்
கருவரம் பாய்ந்துகண் டோர்காட்டு தூபத்தின் கற்றையளக்
கருவரம் பாயதுண் டாலிக்கு மாலிக் கனமல்லவே. (௫௮)

கனஞ்சஞ் சரித்திடும் வண்டலை தண்டலைக் கல்வளையே
கனஞ்சஞ் சலமுறு பாசா டவிவெளி கண்டவனேங்
கனஞ்சஞ் சரிசொலும் வேற்கண் ணிடைக்குக் கருங்குழலுங்
கனஞ்சஞ் சரிகங் களேநீ ரிருக்கை கடனல்லவே. (௫௯)

கடம்பிடிக் குங்கமஞ் சூன்மா லளந்திடுங் கல்வளையான்
கடம்பிடிக் குங்கர டத்தரு கட்சிறு கட்களிறு
கடம்பிடிக் குப்புய னீருட்டு வெற்பகங் காமர்வஞ்சி
கடம்பிடிக் குங்கண்கள் காதள வோடிக் கதித்தனவே. (௬0)

கதிரைக் கடவுள் குறமானை மேவச்செய் கங்கணநா
கதிரைக் கடலொலி போன்மள்ள ரார்த்துக் களைந்தசெந்நெற்
கதிரைக் கடைச்சியர் போரேற்றுங் கல்வளை யாய்ககனக்
கதிரைக் கடவயிற் றார்ப்பாயென் றால்வருங் கைவலமே. (௬௧)

வரச்சந் திரனெனுஞ் செந்தழற் பக்தம் வழுத்துநற்ற
வரச்சந் திரணத்தின் மாற்றுங் கடாசல மங்குலுலா
வரச்சந் திரதில கம்வளர் கல்வளை மானுயிர்க
வரச்சந் திரவி னடந்தா னுணவென வந்ததுவே. (௬௨)

வந்தனை யன்பர் மனத்தாண் டடைபடு மாதங்கங்க
வந்தனை யன்றுகொன் றோன்முக நாபிகண் வாய்கரஞ்சி
வந்தனை யன்பணி கல்வளை யான்வரை மன்னவனீ
வந்தனை யன்றெனின் மானுயி ரம்புலி மாலுண்ணுமே. (௬௩)

மான வலக்கண்ட வாவினைப் பஞ்சினை மாய்க்கும்பவ
மான வலக்கண்டை மாவுரி யான்வன சப்பதத்தின்
மான வலக்கண் டரித்தோன புகழ்கல் வளையிற்பெரு
மான வலக்கண் டகர்க்கொழிப் பாயென மாலறுமே. (௬௪)

மாலை யனங்கங் கரியோன் பதம்பெரி தன்றுமன்றின்
மாலை யனங்கங் கைவார்ச டிலேசன் மதலைகொன்றை
மாலை யனங்கங் கணவெங் கணபண வாளரவன்
மாலை யனங்கங் குலாங்கல் வளையிரு மாதவர்க்கே. (௬௫)

இரும்புண் டரவெண்டு கண்மணி மந்திர மெய்தன்பரை
யிரும்புண்ட நீரெனத் தற்சேர்க்கு நாதனை யிக்குசெற்ப
யிரும்புண்ட ரீகமுஞ் சூழ்கல் வளையனை யெண்ணிப்பண்ணி
யிரும்புண்டரு மயிற்றென் றிசைக்கோன் பின்னை யென்செய்வனே.

வன்னி களங்க னரிமா றுதிக்கு மலைமகள்கை
வன்னி களங்கனி யென்றெண்ணு கண்டன் மகிழ்ந்துபெற்ற
வன்னி களங்கப டற்றோர் பிறவி வலைப்பிணியாம்
வன்னி களங்களை யுங்கல் வளைக்கும்ப மாதங்கமே. (சுஎ)

தங்க மலையதி ருல்வேதப் போலி தனைவரைமா
தங்க மலையச மேழ்காதம் வாசந் தருங்கல்வளை
தங்க மலையம் பிகைகுமரா வென்று சாற்றிற்சந்த்
தங்க மலையரும் பாக்கொம் பிரண்டுந் தருவிப்பனே. (சுஅ)

திருமந்தக் காரிடத் தாக்கிடு மாமுகன் சந்தனப்பூந்
தருமந்தக் காலசை கல்வளை வாசன்றன் றாட்டினின்மா
தருமந்தக் காலமுந் தப்பாமற் சாரதி தாரைத்துளி
தருமந்தக் கார்முந்த முன்றோர் கடவுதல் சால்புடைத்தே. (சுகூ)

சாலிக்கு வாலிக்கு வெங்கணை யேவித் தயங்கியபாஞ்
சாலிக்கு வாலிய தூசருள் கோலமுன் றுங்குபொறை
சாலிக்கு வாலிப மார்க்கண்டர்க் கீந்தவன் றந்தமைந்தன்
சாலிக்கு வாலிக்கு வான்றுவங் கலவளைத் தானத்தனே. (எ0)

தான வரங்கம்பங் கஞ்செய்யுஞ் சாரங்கன் றுழுமுத்தித்
தான வரந்தரு வாவேற் குமரன் றமையமழைத்
தான வரங்கம் பலத்தான் றருகளி றேகல்வளைத்
தான வரங்க ளுதவாயென் சித்தத் தறியினின்றே. (எக)

சித்தம் பரமுத் தலைவேலன் பாம்பரை சிக்கெனவி
சித்தம் பரமுத் தரிகங்கொண டோன்மைந்தன் செய்யிற்பரி
சித்தம் பரமுத்த ராகொன்று கல்வளைத் தேவையுன்னுஞ்
சித்தம் பரமுத்த ராவாருக் காகுஞ் செயத்தம்பமே. (எ௨)

தம்பூஞ் சுரதஞ்செய் யாதீன்ற சேய்தொழுந் தாளினன்கீ
தம்பஞ் சுரமிழற் றுஞ்சோலைக் கல்வளைச் சாரலிற்பா
தம்பஞ் சுரத்துப் படச்சேக்கும் பொற்கொடி சுற்பத்தினி
தம்பஞ் சுரருண்டி போன்மொழி தேன்குழ றுனெங்குமே. (எ௩)

கும்ப னகத்திய னூலளக் தோல்கொற்ற வாகல்வளைக்
கும்ப னகத்திற் கனகா சுரற்செற்ற கோளரியே
கும்ப னகத்தின் சிறகரிந் தோன்றெழுங்கோன் வெற்பின்வாய்க்
கும்ப னகத்தின் புவிதாங்கி யோகுறைந் தாய்புயமே. (எச)

புயங்கந் தரித்தவன் கட்கலன் பூண்டு சிலம்பிசுற்றப்
புயங்கந் தமைந்து மடக்கிச் சடம்புற்று மூடவெம்பேய்
புயங்கந் தரத்தக்க் காணுறை மாதவப் போதர்க்கன்றம்
புயங்கந்த நாறிடுங் கல்வளை யானடிப் போதரிதே. (எரு)

அரியா தவனிந் தளகேசன் வானயி ராபதத்தி
னரியா தவனிறைஞ் சுநதாட் பதுமவண் டார்பிறப்பை
யரியா தவனி மலக்கல் வளையுறை யத்தபொய்யர்க்
கரியா தவநிலை யார்க்கெளி யானெ னகப்பொருளே. (எசு)

கப்பணத் தந்தமில் வெஞ்சூரட் டோனுடன் கார்விடநா
கப்பணத் தந்த வரைக்குற மாதின் கருத்துறவா
கப்பணத் தந்தக் கரியாய்வந் தோக்கிடங் கஞ்சத்திரா
கப்பணத் தந்தவழ் செய்தொறு மாமுரல் கல்வளையே. (எஎ)

கல்லார மூரற்பெண் ணுக்குபிண் ணுக்கணைக் கண்ணனெண்ணுங்
கல்லாரஞ் செங்கழு நீர்வாவி மேவிய கல்வளையான்
கல்லா ரருவியங் குன்றத்தி னேற்றுன் கணவர்பொன்னே
கல்லாரம் பூமுருக் கென்று ரறிந்திலன் கான்மயிலே. (எஅ)

கானகத் தானத்தி ரூழிலங் கேசனைக் காய்ந்துவெண்மை
கானகத் தானத்தில் வீழ்த்தரன் சேய்வளை கான்றமுத்தங்
கானகத் தானத் திருள்சீய்க்குங் கல்வளைக் கட்டுபின்னற்
கானகத் தானத்தி யென்றேத்தி னென்பவக் கட்டறுமே. (எகூ)

கட்கஞ்ச மள்ளர் களைகளை கல்வளைக் கத்தன்றறு
கட்கஞ் சனைவதைத் தோன்மருகன் வரைக் காவன்மின்னே
கட்கஞ் சனப்புயல் யொங்கா லகால கடுவடுவேற்
கட்கஞ் சமானம் வரைப்பா யிருதொழில் காட்டரிதே. (அ0)

அரக்கர விந்தறக் கொன்றோன் பெருவமு தேவெங்கொலை
யரக்கர விந்தம் பயில்வன நீத்தண்மி ஞேநின்றுகே
ளரக்கர விந்தன் குலத்தோர் மணிகையி னுற்கல்வளை
யரக்கர விந்தம் புனைவோர்க் கொலிக்கு மரவங்களே. (௮௧)

வங்கங் கணவர் நிதிதேடப் போனதென் வாய்ந்தபில
வங்கங் கணச்சி யுடைக்குங் குடக்கனி வாரந்தற
வங்கங் கணவி மடைதத்து தென்கல் வளையிலர
வங்கங் கணன்கிரி யன்னாள்பொன் னங்க மருவுறவே. (௮௨)

மருக்காவி னுறிடக் குங்குலு வாலயம் வாசங்கொள்ள
மருக்காவி பூம்பண்ணை நாறிடுங் கல்வளை வாரகொன்றைத்தா
மருக்காவி யன்ன வனைபபா டிலர்கவி வாணரெங்க
மருக்காவின் பாலுகுத் தாலெனப் பாடுவர் மாந்தரையே. (௮௩)

தரைக்குந் ததிக்குங் கனிவாயங் காந்து தயங்கியமந்
தரைக்குந் தவாளி தனுவாங்கு மால்பணி தற்பரன்மைந்
தரைக்குந் தளக்கஞ்ச மான்மகிழ் கல்வளை தாங்கியநா
தரைக்குந்தன் முன்னவ னைப்பாட லாற்கொள்வர் சங்கத்தரே. ௮௪

சங்கர ஞட்டத் திரண்டஞ்சு நாற்பொறிச் சர்ப்பம்வன
சங்கர ஞட்டந் தவிர்த்தோன் றுயில்வடந் தண்டரளஞ்
சங்கர நாட்டயில் சேர்வஞ்சி கல்வளைத் தந்தியங்கு
சங்கர ஞட்டன்பி னன்பகண் டாயென் றனதுயிரே. (௮௫)

தனக்காக்கை யன்றி வழங்காரைப் பாடித் தளர்பசிய
தனக்காக்கை யுண்ணு முடல்வீக் கிடச்சலித் தேன்சிலைவே
டனக்காக்கை போக்கிய நோக்கினன் மைந்ததண் காரிணைச்சந்
தனக்காக்கைந் நீட்டுதென் கல்வளை யன்பர் சகாயத்தனே. (௮௬)

காயப் படவு துளங்கிச் சிலேட்டுமக் கால்விசைத்துக்
காயப் படவு முடியுதை யோமலர்க் காவணமா
காயப் படவுயர் கல்வளை நாத கரியுரியே
காயப் படவுமை காதல னீன்ற கரமஞ்சனே. (௮௭)

மஞ்சரிக் கண்ணிமின் வேணியன் கல்வளை வாசன்மணி
மஞ்சரிக் கண்ணிய சாபத்தை மாற்றும் வரதன்வெற்பின்
மஞ்சரிக் கண்ணிப் புயத்தாய் மணங்கலங் காயின்றுநீ
மஞ்சரிக் கண்ணி நகைக்குடைந் தாயுன் மனத்துரமே. (அக)

துரங்கந்தந் தாவளந் தேரா ளெனும்படை சூழ்ந்திடுஞ்சா
துரங்கந் தரணி படைத்திந்த்ர லோகமுந துய்ப்பரிதோ
துரங்கந் தனிலுறை மாலைததுங் கல்வளைத் தும்பிகற்சிந்
துரங்கர்த வேழணைக் கன்பான மெய்த்திருத் தொண்டருக்கே. அக

அருமந்த மாருதத் தேரோற்கு மைத்துன னனபிரா !
னருமந்த மாமுகன் கல்வளை யான்வெற்பி னுடவரை
யருமந்தக் காக்குழன் மாலையும் வாடின தையமில்லை
யருமந்த மானுக் கிருப்புவெள் ளேறுடை யான்வையமே. (கூo)

வைப்பர சத்தி யுரியா னிடத்தின் மகிழ்தருபாா
வைப்பர சத்தி திருமுலைப் பாலுண்ட வாயன்மத
வைப்பர சத்தி செறிந்திடுங் கல்வளை வானவர்கோ
வைப்பர சத்தினம் பெற்றாரற் றார்துயர் மாநிலத்தே. (கூக)

மாவா ரணமெனக் கொண்டோன் விழிபட்டு மாய்ந்தவெங்கா
மாவா ரணங்க ளொருநாலு மேத்தி வணங்குமந்த
மாவா ரணங்கல் வளையான்றந தான்கொன்னற மாலைவெங்கண்
மாவா ரணங்கினை யென்செய்கு வாய்மலர் வாளிகொண்டே. (கூஉ)

வாள முருக்கிதழ் வல்லவை சேர்கல் வளையிற்பிர
வாள முருக்கித வேணியன் வெற்பின் மதித்தசக்ர
வாள முருக்கு முலையாய் மலர்க்கரங் கொண்டுகர
வாள முருக்கயி னேர்வாரி பொத்துதன் மற்றரிதே. (கூந)

மற்கடந் தாவருங் காமேவு கல்வளை வாசன்வெங்கா
மற்கடந் தார்புக ழைங்கரன் வெற்பில்வன் பார்த்தனுடன்
மற்கடந் தான்கட் டழல்குளிர் கீச்சுர வாரியென்று
மற்கடந் தாங்கிய கொங்கையெவ் வாறு மருவினளே.. (கூச)

மரக்கணி யார்தம் மலரேட விழ்த்து வயினிடத்த
மரக்கணி யாரெனச் சோதிடஞ் சொல்லினர் வாளரிச்ச
மரக்கணி யாதுசெய் வாணம் விதிவசம் வல்லவைவா
மரக்கணி யார்மைந்தர் கல்வளை வாசர் மலையகத்தே. (கரு)

கத்தாறு காலிசை யார்க்குங் குழற்கரும் பேயுயர்மா
கத்தாறு காலக் கருமாரி வந்தது கன்னியம்பூ
கத்தாறு காலுங் கனியன்னி யாரங் கரைசிந்திவே
கத்தாறு கால்வருங் கல்வளை வாழைங் கரன்வெற்பிலே. (கசு)

கரனுக ராமுனி மாதுள மேந்திய கல்வளையான்
கரனுக ராவற நேமிப் படைக்கல மேவிவரு
கரனுக ராசன் பணிபெரு மான்புகழ் கற்றிடச்சி
கரநாக ராதிப னுயிர நாப்பெற்ற காரணமே. (கஎ)

காரப் பிணைவிழி வல்லவை பாலமர் கல்வளையான்
காரப் பிணையென வெங்குகின் றோன்வெற்பிற் காமரந்த
காரப் பிணையற் சுருள்வஞ்சி போறகன்னியீர் பொறியா
காரப் பிணையொன்று வந்ததுண் டோசொல் லுங் கண்டதுண்டே. ()

கண்டால முண்ட பெருமா னுதவிய கான்முளைபுன்
கண்டால மாந்தர்க் ககற்றுரு வாகனன் கல்வளையின்
கண்டால நேருங் கரத்தானைக் காணத் தொழப்புகழக்
கண்டாலங் கைத்தலம் பெற்றேனுற் றேனென் கனதுயரே. (ககூ)

கனகந் தரநிற மால்சாபந் தீர்த்திடுங் காரணவென்
கனகந் தரநெஞ்சிற் றோன்றுபுன் மாலைகைக் கொள்ளைசெங்கோ
கனகந் தருமலர் கோவைசெய் நாருங் கவினுமன்றோ
கனகந் தரள மணிமாடக் கல்வளைக் கற்பகமே. (க00)

கல்வளையந்தாதி முற்றிற்று.